# க்கதைகள்

ஏ. பி. நாகராஜன்.



மூலம் :

ஈசாப்

தமிழில் :

சீதாலக்ஷ்மி

ராமன் பதிப்பகம்

# நீ

# கதைகள்

## சீதாலக்ஷ்மி



ாமன் பதிப்பகம்

சென்னை-18.

முதற் பதிப்பு ஜனவரி 1962


விலை ரூ. 2 - 50

நல்ல நீதிகளை எளிய முறையில் சொல்வதில் உலகப்பிரசித்தி பெற்றவர் பேரறிஞர் ஈசாப்புதான். அவரின் கதைகள் சிலவற்றையே இங்கு தமிழில் தந்திருக்கிறேன்.

—சீதாலக்ஷ்மி

சுடர் பிரிண்டர்ஸ்
சென்னை 1

# 1. ஓநாயின் பரிசு

ஒரு ஓநாய தனது ஆகாரத்தை துடன் வேகமாகத் தின்றது. அதனால் அதன் தொண்டையில் ஒரு எலும்பு சிக்கிக்கொண்டது. அது எவ்வளவு முயற்சித்தும் எலும்பை எடுக்க முடியவில்லை. அப்போது அந்த வழியாக ஒரு நாரை வந்தது. ஓநாய் அதைப் பார்த்து "நண்பா! எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும். என் தொண்டையில் ஒரு எலும்பு சிக்கிக் கொண்டது. அதை நீ எடுத்தால் உனக்கு ஒரு பெரிய பரிசு தருகிறேன்" என்றது.

ஓநாயை வாயை நன்றாகத் திறந்துகொள்ளச் சொல்லிற்று நாரை. தன் நீண்ட மூக்கை ஓநாயின் வாயினுள் விட்டு எலும்பை வெளியேஎடுத்தது. பிறகு ஓநாயிடம் பரிசைக் கேட்டது. அப்போது ஓநாய்



ஏளனமாகச் சிரித்து "ஏ முட்டாள் நாரையே! உனக்கு அறிவு இல்லை என்பது நன்றாகத் தெரி

கிறது. ஓநாயின் வாயினுள் போன உன் தலை நல்ல விதமாக வெளியே வந்ததே! அந்த ஒரு பரிசு போதாதா? வேறு ஒரு பரிசு கூட வேண்டுமோ?" என்று கேட்டது.

**[தீயவர்கள் தீமை செய்யாதிருப்பதே பெரிய மையாகும்.]**

## 2. சேவலும் குள்ளநரியும்

ஒரு சமயம் ஒரு சேவல் ஒரு குள்ளநரியைக் கண்டது. நரிக்குச் சேவலைக் கொன்று தின்ன வேண்டும் என்று ஆசை. ஆனால் ஒரு காரணமும் சொல்லாமல் சேவலைத் தின்ன அது விரும்பவில்லை. அதனால் அது சேவலைப்பார்த்து "நீ இரவு முழுதும் கூவிக்கொண்டேயிருக்கிறாய். உன்னால் என் கூட்டத்தார் வெளியில் தலைகாட்டவே முடிவதில்லை. மேலும் உன்னால் எங்களுக்கு மாத்திரம் இல்லாமல், மனிதர்களுக்கும் தொந்தரவாக இருக்கிறது. இரவு முழுதும் நீ கூச்சலிடுவதால் அவர்களுக்கும் தூக்கம் கெட்டுவிடுகிறது" என்றது.

சேவல் அதிக வருத்தத்துடன் "ஐயா! பொழுது விடிவதைக் காண எனக்கு மகிழ்ச்சி

யாக இருக்கிறது. என் மனைவிகள் மகிழ்ச்சி யடையவும், குடியானவர்கள் தங்கள் வேலை களைச் செய்யப்போகவும் நான் கூவுகின்றேன். இதைத் தவிர மற்ற நேரங்களில் நான் கூவ மாட்டேன்" என்றது.

நரிக்கு அதற்குமேல் பேச மனம் இல்லை. அதுகோபத்துடன் "வா!வா!! உன்னோடு பேசிக் கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை. காலை ஆகாரத்திற்கு நேரமாகிவிட்டது" என்று சொல்லிக்கொண்டே சேவலின்மீது பாய்ந்து அதைக் கிழித்துத் தின்றது.

**[கெட்டவர்களுக்கு அவர்கள் கூறுவதே நீதி; அவர்கள் செயலே நேர்மை.]**

## 3. ஓநாயும் ஆட்டுக்குட்டியும்

ஒரு ஓநாய் அதிக தாகமாயிருந்தது. அது தண்ணீர் பருக ஒரு ஓடைக்குச் சென்றது. அப்போது சிறிது தூரத்தில் ஒரு ஆட்டுக்குட்டி தண்ணீர் குடிப்பதைக் கண்டது. உடனே அது ஆட்டுக்குட்டியைப் பார்த்து "டேய் முட்டாள்! நான் தண்ணீர் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்க்கவில்லையா ! ஓடையைக் கலக்குகிறாயே" என்றது.

ஆட்டுக்குட்டி மிகுந்த பயத்துடன் "நான் உங்களுக்குக் கீழ்ப்பக்கத்தில் தண்ணீர் குடிக்கிறேன். நீங்களோ மேல்பாகத்தில் குடிக்கிறீர்கள். நான் இங்கே தண்ணீர் குடிப்பதால் அங்கு தண்ணீர் எப்படிக் கலங்கும்" என்றது.

"ஆறு மாதத்திற்கு முன்னால் உன் தகப்பனார் இப்படித்தான் என்னிடம் வாயாடினார். அதற்காக அவருடைய தோல் உரிக்கப்பட்டது. அதுபோல உன் தோலையும் உரித்தால்தான் நீ வாயாடுவதை நிறுத்துவாய்" என்று கோபமாகச் சொல்லிற்று ஓநாய்.

ஆட்டுக்குட்டி பயத்தால் உடல் நடுங்க "ஐயா! நான் சொல்வதைக் கேளுங்கள். தயவு செய்து என் பேச்சை நம்புங்கள். நான் பிறந்து



கூட இன்னும் ஆறு மாதம் ஆகவில்லை" என்று மிகப் பணிவாகச் சொல்லிற்று.

ஓநாய் கோபமாகப் பற்களைக் கடித்துக் கொண்டு "என்ன கர்வம். எங்கள் இனத்தாரிடம் விரோதம் காட்டுவதே உங்கள் இனத்த வழக்கமாகிவிட்டது. இனி நீ உன் முன்

னோர்கள் செய்த கொடுமைகளுக்குத் தண்டனை அடைந்தே தீரவேண்டும்" என்று சொல்லிக் கொண்டே ஆட்டுக்குட்டியின்மேல் பாய்ந்தது. ஆட்டுக்குட்டி என்ன கத்தியும் விடாமல் அதைக் கடித்துத் தின்றது ஓநாய்.

**[கெட்டவர்கள் தங்கள் செய்கைக்கு நீதியையோ, தவறுக்கு மன்னிப்பையோ விரும்ப மாட்டார்கள்]**

## 4. தவளைகளும் சுண்டெலிகளும்

ஒரு சமயம் நீர் நிரம்பிய குளம் யாருக்குச் சொந்தம் என்பதுபற்றி சுண்டெலிகளுக்கும், தவளைகளுக்கும் பயங்கரமான சண்டை ஏற்பட்டது. அநேக எலிகளும் தவளைகளும் இறந்தன.



அப்போது வானத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்த பருந்துகள் அவற்றின்மீது சுலபமாகப் பாய்ந்தன. சுண்டெலிகளையும், தவளைகளையும் தமக்கு இறையாக்கிக் கொண்டன.

**[எளியவர்கள் ஒற்றுமையின்றி இருப்பது வலியவர்களுக்கு நன்மையாகும்]**

## 5. சிங்கம், கரடி, குள்ளநரி.

ஒரு சிங்கமும் கரடியும் கூட்டாக வேட்டையாடி ஒரு மானைக் கொன்றன. கொன்ற மானைப் பங்குபோடுவதில் சிங்கமும், கரடியும் பயங்கரமாகச் சண்டை செய்தன. வெகுநேரம் சண்டை செய்ததால் இரண்டும் சோர்வடைந்து விட்டன. இரண்டும் தனித்தனியே தரையில் சாய்ந்துவிட்டன. அந்தச் சமயம் வெகு தூரத்திலிருந்து சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு குள்ளநரி ஓடிவந்தது. சிங்கமும் கரடியும் களைப்பினால் எழுந்திருக்கக் கூட முடியாமல் இருந்தன. இதை நன்றாக அறிந்த நரி



மானைத் தூக்கிக்கொண்டு ஓடிவிட்டது. சிங்கமும் கரடியும் ஒன்றும் செய்ய முடியாமல் கீழே கிடந்தபடி பார்த்துக்கொண்டிருந்தன. அவை இரண்டும் வேட்டையில் கிடைத்ததை நல்லமுறையில் பங்கிட்டுக் கொள்ளாமல் சண்டைபோட்டோமே என்று வருத்தப் பட்டன.

***[சண்டையும் சச்சரவும் இரு தரப்பினருக்கும் தீமையாகும்]***

## 6. சிங்கத்தின்

சிங்கம், கரடி, ஓநாய், குள்ளநரி ஆகிய நான்கும் சேர்ந்து வேட்டையாடப் புறப் பட்டன. வேட்டையில் கிடைப்பதை நான்கும் சமமாகப் பங்கு போட்டுக் கொள்வது என்று அவை ஒப்புக்கொண்டிருந்தன. வேட்டையில் ஒரு மான் கிடைத்தது. ஒப்பந்தப்படி மானை நான்கு பங்குகளாகச் செய்தன. கரடி, ஓநாய், குள்ளநரி ஆகிய மூன்றும் தம் பங்கை எடுக்கப் போகும் சமயம் சிங்கம் தடுத்து "வேட்டையில் கிடைத்த பொருளின் பங்கைப் பற்றிக் கூறு கிறேன். முதல் பங்கு எனக்கு ஒப்பந்தப்படி சேரவேண்டியது. இரண்டாவது பங்கு மானைப் பிடிக்க எனக்கு ஏற்பட்ட கஷ்டங் களுக்காகச் சேரவேண்டியது. மூன்றாவது பங் கைக் கேட்க எனக்கு எவ்வளவோ காரணங் கள் இருக்கின்றன. நான்காவது பங்கு பற்றி நீங்கள் சர்ச்சை செய்ய விரும்பினால் அதற்கு நான் தயாராக இருக்கிறேன்" என்று கூறி நான்கு பங்குகளையும் கவ்விக்கொண்டு சிங்க நடையில் அது சென்றது. மற்ற விலங்குகள் வேறு ஒன்றும் செய்ய முடியாமல் மௌனமாக ...ிட்டன.

**[வலிமையும் சுயநலமும் உள்ளவர்களுக்கு அவர்கள் கூறுவதே நீதியாகும்.]**

# 7. நாயும் அதன் நிழலும்

ஒரு நாய் ஒரு கசாப்புக் கடையிலிருந்து ஒரு மாமிசத் துண்டை திருடியது. அதை வாயால் கவ்விக்கொண்டு தன் இருப்பிடத்திற்குப் புறப்பட்டது வழியில் ஒரு ஓடையைக் கடக்க வேண்டியிருந்தது. நாய் ஓடையைக் கடக்கும்போது தண்ணீரைப் பார்த்தது. அப்போது தண்ணீரில் அதன் உருவம் தெரிந்தது.



தண்ணீரில் தெரிந்த உருவத்தில் அதன் வாயிலும் மாமிசத் துண்டு இருந்தது. அதைக் கண்ட நாய் தண்ணீரிலுள்ள நாயின் வாயிலிருக்கும் மாமிசத்துண்டைக் கவரவேண்டும் என்று விரும்பிற்று. உடனே அது பலமாகக் குரைத்துக்கொண்டு தண்ணீரிலுள்ள நாயின் மீது பாய்ந்தது. அதனால் அது வாயிலிருந்த மாமிசத் துண்டையும் இழந்தது. உயிரைக் காப்பாற்றிக் கொள்ள மிகவும் கஷ்டப்பட்டுக் கரையேற வேண்டியிருந்தது.

(பேராசை பெருநஷ்டம்)

## 8. சேவலும் னக் கல்லும்

சேவல் ஒன்று குப்பையைக் கிளறிக் கொண்டிருந்தது. அப்போது அதற்கு ஒரு விலைமதிப்பற்ற இரத்தினக்கல் கிடைத்தது. அதைக் கண்ட சேவல் வருத்தமுடன் "இது எனக்குக் கிடைத்தென்ன பயன்? ஒரு இரத்தின வியா



பாரியின் கையில் அகப்பட்டிருந்தால் அவனுக்கு இதன் மதிப்புத் தெரியும். எனக்கோ இதைவிட ஒரு தானியமே விலைமதிப்பில்லாத பொருளாக இருக்கும்" என்று சொல்லிற்று.

*[ஒருவருக்கு உபயோகமாகும் பொருளே அவர்களுக்குச் சிறந்ததாகும்.]*

## 9. உதவிக்குப் பலன்

குளிர்காலத்தில் ஒரு நாள் ஒரு பாம்பு பனியில் விறைத்துப்போய் சுருண்டு கிடந்தது அதன் உயிர் போய்விடுமோ என்ற நிலையிலிருந்தது. அச்சமயம் அதை ஒரு குடியானவன்

பார்த்தான். இரக்க குணமுள்ள அவன் பாம்பின் உடம்பில் சூடேற்றி, உயிர் பெறவும் அதை எடுத்துத் தன் மார்பில் அணைத்து வைத்துக் கொண்டான். குடியானவனுடைய உடல் சூடு பட்டதும், பாம்பு மெள்ள உணர்வு பெற்றது. அதற்கு நன்ருக உணர்வு வந்ததும், அது தன்னைக் காப்பாற்றிய குடியானவன் மார்பைப் பலமாகக் கடித்துவிட்டது. பாம்பின் விஷம் ஏறி உயிர் போகும் நிலையில் குடியானவன் தன் செய்கைக்காக வருந்தி பாம்பைப் பார்த்து "ஏ நன்றிகெட்ட நாகமே! உன்னைக் காப்பாற்றிய என்னையே கடித்துவிட்டாயே!! உன்குணம் தெரிந்தும் நான் உனக்கு உதவி செய்தேன் அல்லவா? அதற்கு இது சரியான தண்டனை தான்" என்ருன்.

[**தீயவர்களுக்குச் செய்யும் உதவி தீமையாகவே முடியும்.**]

## 10. சிங்கத்தின் ஆசி

ஒரு முட்டாள் கழுதை, ஒரு சிங்கத்தைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தது. அப்போது சிங்கம் கோபமடைந்து பற்களைக் கடித்து உறுமியது. பிறகு சற்று யோசனை செய்து, கழுதையைப் பார்த்து அது "நன்ருகச் சிரி, எப்பொழு

தும் நீ கழுதையாகவே இருந்து வா. உன்னுடைய இழிவான குணத்தினுல்தான் உன் உயிர் தப்பியிருக்கிறது" என்று சொல்லிற்று.

[அறிவாளிகள் முட்டாள்களின் நிந்தனையைக் கண்டு வருந்தமாட்டார்கள்.]

## 11. இரண்டு சுண்டெலிகள்

ஒரு கிராமத்துச் சுண்டெலி தன் நண்பனை நகரத்துச் சுண்டெலியை, விருந்துக்கு அழைத்தது. நகரத்து சுண்டெலியும் நண்பன் வீட்டிற்கு வந்தது. அப்போது கிராமத்து சுண்டெலி அது வசித்து வந்த வீட்டில் இருந்த பழைய சாதம், புளித்த கூழ் முதலியவற்றை நண்பனுக்கு விருந்தாகக் கொண்டுவந்து கொடுத்தது. நகரத்துச் சுண்டெலிக்கு இவை பிடிக்கவில்லை. ஆனுலும் அது நண்பன் அளித்த விருந்துக்கு மரியாதை காட்டவும், பெருந் தன்மையுடன் நடக்கவும் பழைய சோற்றையும், புளித்த கூழையும் தின்றது. பிறகு நகரத்தில் அது எவ்வளவு நல்லவிதமாக வாழ்கிறது, அதற்கு எப்படிப்பட்ட பொருள்கள் கிடைக்கின்றன என்பதை நண்பனுக்குக் காட்ட எண்ணிற்று. அதனுல் அது தன் நண்பனை கிராமத்துச் சுண்டெலியை நகரத்துக்கு விருந்துக்கு அழைத்தது.

கிராமத்துச் சுண்டெலிக்கும் நகரத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. மேலும் நகரத்தில் கிடைக்கும் விதவிதமான பலகாரங்களைச் சாப்பிட வேண்டும் என்று விரும்பிற்று. அதனால் நண்பன் அழைப்பை ஏற்றுக்கொண்டு உடனே புறப்பட்டது. நகரத்து எலியும் தன் பெருமைகளைக் காட்ட வேண்டும் என்று கர்வத்துடன் அழைத்துக் கொண்டு நகரத்திற்கு வந்தது. நகரத்து எலி தான் வசிக்கும் இடத்தை முதலில் நண்பனுக்குக் காட்டிற்று. சமையலறை, சாமான்கள் வைக்கும் அறை, முதலியவற்றைக் காட்டிவிட்டுச் சாப்பிடும் அறைக்கு வந்தன. சாப்பாட்டு அறையில் மேஜை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. மேஜைகளின் மீது விதவிதமான பலகாரங்களைச் சாப்பிடப் போகலாம் என்று சொல்லிற்று. இரண்டும் மேஜையை நெருங்கும் சமயம் வேலைக்காரர்கள் கதவைத்திறந்து கொண்டு வேகமாக உள்ளே வந்தார்கள்.

சப்தம் கேட்டு இரண்டு எலிகளும் நடுங்கிப் போய்விட்டன. முக்கியமாக அது வரை அமைதியாக வாழ்ந்து வந்த கிராமத்து எலிக்குப் பயத்தினால் உயிரேபோய் விடும்போல் இருந்தது. இரண்டு எலிகளும் மேஜையின் கீழே பதுங்கிக்கொண்டன.

வேலைக்காரர்கள் வெளியேபோகும் வரை எலிகளும் பயத்துடன் இருந்தன.

அவர்கள் போனதும் நகரத்து எலி தைரியமாகத் தன் நண்பனை பலகாரம் சாப்பிட அழைத்தது.



அப்போது கிராமத்து எலி "நண்பா! உன்னுடைய விருந்துச் சாப்பாடு வெகு நேர்த்தியாக இருக்கிறது. ஆனால், உலகத்தில் இப்படிப் பயந்து நல்ல பலகாரங்களைச் சாப்பிட்டு உயிர் வாழ்வதை விட பழைய சோறும், புளித்த கூழுமே மேலானது. அதனால் நான் போய் வருகிறேன். உன் பலகாரங்களை நீயே சாப்பிடு" என்று சொல்லிவிட்டு தன் கிராமத்தை நோக்கி வேகமாக ஓடிற்று.

**[உயிருக்கு அஞ்சி ஆடம்பர வாழ்க்கை நடத்துவதைவிட அமைதியான எளிமையே சிறந்தது.]**

## 12. காக்கையின் புத்திமதி

ஒரு குருவி, நத்தையின் ஓட்டை உடைத்து உள்ளே இருக்கும் தசையைத் தின்ன

முயற்சித்துக் கொண்டிருந்தது. ஆனால், அதனால் நத்தையின் ஓட்டை உடைக்க முடியவில்லை. அது விடாமுயற்சியுடன் ஓட்டை உடைக்க கொத்திக் கொண்டிருந்தது. அதைத் ஒரு காக்கை பார்த்தது. அது குருவியினிடம் வந்து "ஓட்டை உடைக்க இவ்வளவு கஷ்டப் படலாமா? இதைத் தூக்கிக் கொண்டு உயரப் பறந்து ஒரு நல்ல பறையாகப் பார்த்து மேலே இருந்து இதைப் போடு; உடைந்து விடும்" என்றது.

குருவிக்கு இந்த போதனை நல்லதாகப்பட்டது. அது உடனே நத்தையைக் கால்களில் பற்றிக்கொண்டு உயரப் பறந்தது. கீழே இருந்த பெரிய பாறையில் நத்தையைப் போட்டது. நத்தைக் கூடும் சுக்கு சுக்கலாக உடைந்து விட்டது. ஆனால் குருவி கீழே வந்து தசையைத் தின்பதற்குள், தசையை காக்கை வந்து கவ்விக் கொண்டு போய்விட்டது.

**[சுயநலக்காரர்கள் கூறும் யோசனை அவர்களுடைய நன்மைக்கானதாகவே இருக்கும்.]**

## 13. குள்ளநரியும், காக்கையும்

ஒரு காக்கை தன் வாயில் ஒரு வடைத் துண்டை வைத்துக்கொண்டு மரத்தின்மீது உட்கார்ந்திருந்தது. இதை ஒரு குள்ளநரி

பார்த்துவிட்டது. அதற்கு காக்கையின் வாயில் இருக்கும் வடையைச் சாப்பிடவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. ஆனால் எப்படி அடைவது என்று அதற்குத் தெரியவில்லை. அதனால் மரத்



தின்மீது ஏறமுடியாது. குள்ளநரி நன்றாக யோசித்து ஒரு முடிவு செய்தது. உடனே அது காக்கையைப் பார்த்து "உலகில் சிறந்த நண்பனே! உன்னுடைய அழகையும் உடலின் நிறத்தையும் எல்லோரும் புகழ்கிறார்கள். ஆனால் உன்னுடைய அழகு, நிறம் ஆகியவை போல் உன் குரலும் இனிமையாக இருந்தால் நீதான் உலகத்திலேயே சிறந்த பறவை" என்றது.

இந்தப் புகழ்ச்சியைக் கேட்டுக் காக்கை தன் குரலைக் காட்ட விரும்பிற்று. அது உடனே வாயை நன்றாகத் திறந்து, இரண்டு மூன்று முறை கத்திற்று. காக்கை வாயைத் திறந்த போது, அதன் வாயிலிருந்த வடை கீழே விழுந்தது. உடனே குள்ளநரி அதைக் கவ்வி விழுங்கி விட்டது. பிறகு காக்கையைப் பார்த்து "உன் அழகையும், நிறத்தையும், குரலையும் நான்

பாராட்டுகிறேன். ஆனால் உன் புத்தியைப் பற்றி நான் ஒன்றும் சொல்லமாட்டேன். அதை நீயே தெரிந்து கொள்." என்று சொல்லி விட்டு ஓடியது.

[அளவுகடந்து புகழ்பவர்களிடம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.]

## 14. சிங்கத்தின் மனம்

ஒரு சிங்கம் வாலிபமும், பலமும் இருக்கும் போது எல்லா விலங்குகளிடமும் கொடுமையாக நடந்து வந்தது. அதற்கு வயதாகி, கிழத் தன்மை வந்து எழுந்திருக்கவும் சக்தியில்லாமல் போயிற்று. அப்போது காட்டிலிருந்த மிருகங்களில் சில கோபத்துடனும், சில தங்களுக்குச் செய்த கொடுமைக்குப்பதில் செய்யவும் ஒன்று கூடி சிங்கத்தைத் தாக்கத் தொடங்கின. எல்லா மிருகங்களையும் விட கழுதையின் பின்னங்கால் குளம்பினால் தாக்கப்பட்டதே சிங்கத்திற்கு அதிக வருத்தத்தை உண்டு பண்ணிற்று.

## 15. நாயும் கழுதையும்

ஒரு பணக்காரனிடம் ஒரு சிறு நாய் இருந்தது. அது தன் எஜமானன்மீது தாவிக்

குதித்து விளையாடும். எஜமானனும் அதன் விளையாட்டைக் கண்டு மகிழ்வான். அதற்கு நல்ல ஆகாரங்களைக் கொடுப்பான். அதே வீட்டில் ஒரு கழுதை இருந்தது. அது நாயின் விளையாட்டையும், எஜமானன் அதனிடம் அன்பாகவும் நடப்பதையும்பார்த்துப் பொறாமை கொண்டது; தன்னை கொடுமையாக நடத்துவதாக எண்ணிற்று. அதனால் நாயைப்போல் எஜமானனிடம் தாவிக் குதித்து விளையாடாததனால்தான் இவ்விதம் கொடுமையாக நடத்தப் படுகிறோம் என்று நினைத்தது. அதனால் அது எஜமானனிடம் விளையாடி அன்பைப் பெறத் தீர்மானித்தது. ஆனால் அது எஜமானன்மீது தாவிக் குதித்து விளையாடியதற்கு ஒரு தடியினால் வேண்டிய அளவு பரிசு கிடைத்தது. இதன் மூலம் விளையாடும் பிராணிக்கும் வேலை செய்யும் பிராணிக்கும் உள்ள வித்தியாசம் கழுதைக்குத் தெரியவந்தது.



**[ஒருவருடைய செயல்களுக்கு நன்மையைத் தரலாம். அதுவே மற்றவருக்குத் தீமையை உண்டுபண்ணலாம்]**

## 16. சிங்கமும் சுண்டெலியும்

ஒரு காட்டில் ஒரு சிங்கம் தூங்கிக் கொண்டிருந்தது. அப்போது ஒரு சுண்டெலி சிங்கமென்றறியாது அதன் மீது ஓடிவிளையாடிற்று. அதனால் தூக்கம் கலைந்த சிங்கம் கோபமடைந்து சுண்டெலியைப் பிடித்துக்கொல்ல நினைத்தது. அப்போது சுண்டெலி பயந்து தன்னைக் கொல்லாமல் விடும்படி வேண்டிக் கொண்டது. சிங்கமும் இரக்கப்பட்டு அதை விட்டுவிட்டது.

சில நாட்களுக்குப் பிறகு அந்தச் சிங்கம் வேடர்களின் கையில் அகப்பட்டுக்கொண்டது. அதை வேடர்கள் பலத்த வலையினால் கட்டிப் போட்டார்கள். அது தன்னை விடுவித்துக்கொள்ள உரத்த குரலில் கர்ஜனை செய்தது. சிங்கத்தின் கர்ஜனையை



சுண்டெலி கேட்டது. உடனே அது சிங்கம் ஆபத்தில் சிக்கிக் கொண்டிருப்பதை அறிந்தது. அது ஓடோடி வந்து சிங்கத்தைக் கட்டியிருக்கும் வலையைக் கடித்து அதை விடுவித்தது. அதன்பிறகு சிங்கம் அந்தச் சுண்டெலி தன் மீது எப்பொழுது விளையாடினாலும் கோபம் அடைவதே இல்லை.

[*சிறு துரும்பும் பல்குத்த உதவும்*]

## 17. எந்த தெய்வம்

ஒரு பருந்து நோயினால் துன்பப்படுவதைக் கண்ட, அதன் தாய் அழத் தொடங்கிற்று. அதைக் கண்ட நோயுற்ற பருந்து "அம்மா அழாதே என் உடம்பு குணமாகத் தெய்வத்தைப் பிரார்த்தனை செய்" என்றது. அதற்குத்



தாய்ப் பருந்து "ஐயோ, மகனே நீ காலமெல்லாம் தெய்வங்களுக்காக வைக்கப்படும் பொருள்

களையே கொள்ளையடித்து வந்திருக்கிறாய். இப்போது உனக்காக எந்த தெய்வத்தைப் பிரார்த்திப்பது?" என்று கேட்டது.

[தீமை செய்தவர்கள் அதன் பலனை அடைந்தே தீரவேண்டும்]

## 18. தூக்கணங்குருவியும் மற்ற பறவைகளும்

தூக்கணங்குருவி மிகவும் முன்யோசனை உள்ளது. அது ஒரு குடியானவன் தன் வயலில் சணல் விதைப்பதைப் பார்த்தது. உடனே



மற்ற பறவைகளை அழைத்து "அதோ பாருங்கள். குடியானவன் சணல் விதைக்கிறான். இந்தச் சணல் நாறுதான் வேடர்கள் கண்ணி

களையும், வலைகளையும் செய்ய உதவுகிறது. நீங்கள் அனைவரும் போய் உடனே விதைகளைப் பொறுக்கித் தின்றுவிடுங்கள். இல்லாவிட்டால் பிறகு நாம் அனைவரும் ஆபத்தில் அகப்பட்டுக் கொள்வோம்" என்றது.

பறவைகளோ அதன் பேச்சைக் கேட்க வில்லை. சணல் விதையும் முளைவிட்டு வளரத் தொடங்கிற்று. அப்போதும் தூக்கணாங்குருவி மற்ற பறவைகளுக்கு புத்திமதி சொல்லிற்று. அப்போதும் அவை கேட்கவில்லை. கடைசி யாகத் தூக்கணாங் குருவி "இப்போதும் காலம் கடந்து விடவில்லை. நீங்கள் அனைவரும் ஒன்று கூடி முயற்சித்தால் வரப்போகும் அபாயத்தைத் தடுக்கலாம்" என்றுகூறி விடை பெற்று வேறு காட்டிற்குச் சென்று குடியேறியது. சில நாட் களுக்குப் பிறகு சணல் வளர்ந்து, அறுவடை செய்யப்பட்டு கன்னிகளையும் வலைகளையும் தயா ரித்தார்கள். முன்பு தூக்கணாங் குருவியால் எச்சரிக்கப்பட்ட பல பறவைகள் அந்தக் கன்னி களிலும் வலைகளிலும் அகப்பட்டு வருந்த வேண்டியதாயிற்று.

**[முட்டாள்களுக்குச் சொல்லும் புத்திமதி பயனற்றதாகவே இருக்கும்.]**

# 19. தவளைகளின் அரசன்

சுதந்திரமாக வாழ்வதில் தவளைகளுக்குச் சலிப்பு ஏற்பட்டது. ஒரு அரசன் வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. உடனே அவை தேவனைக் குறித்து பிரார்த்தனை செய்தன.

தேவனும் தவளைகளைச் சோதனை செய்ய ஒரு சிறு மரத்துண்டை அவற்றிற்கு அரசனாகச் செய்து குட்டையில் எறிந்தது. மரத்துண்டு விழுந்ததும் தவளைகள் பயந்து சேற்றினுள் போய் மறைந்து கொண்டன. வெகுநேரம் வரை அவை வெளியில் தலை காட்டவும் பயந் தன. பிறகு ஒரு தவளை மெள்ள மேலே வந்தது. தங்கள் அரசன் ஆடாமல் அசையாமல், பேசா மல் இருப்பதைக் கண்டது. உடனே மற்ற தவளைகளையும் மேலே வரும்படி அது அழைத் தது. எல்லா தவளைகளும் ஒன்றுகூடி மரத் துண்டின்மீது ஏறி விளையாடத் தொடங்கின. முதலில் பயந்த தவளைகள் இப்போது கர்வ மடைந்தன. மேலும் அரசன் அடக்கி ஆளாமல் பேசாமல் இருப்பது தவளைகளுக்குப் பிடிக்க வில்லை. அதனால் அவை மீண்டும் தேவனைப் பிரார்த்தனை செய்தன. தங்களை அடக்கி ஆளக் கூடிய ஒரு அரசன் வேண்டும் என்று தேவ

னிடம் கேட்டுக் கொண்டன. உடனே தேவ னும் ஒரு கொக்கை அரசனாக நியமித்து அனுப் பியது. மரத்துண்டு அரசன் வஞ்சத்தையும் சேர்த்து கொக்கு தீர்த்துக்கொண்டது. தவளைக் கூட்டத்தையே ஒழிக்க அது தொடங்கிற்று. தவளைகள் மீண்டும் தேவனிடம் இந்த கொக்கு அரசன் வேண்டாம் வேறு ஒரு அரசனை அனுப் புங்கள் என்று கேட்டுக்கொண்டன. ஆனால் தேவனோ "நீங்களே இந்தத் துன்பத்தை வர வழைத்துக் கொண்டீர்கள். சுதந்திரமாக வாழ் வது உங்களுக்குப் பிடிக்கவில்லை. உங்களை ஒன் றும் செய்யாமல் இருப்பவர்களும் பிடிக்கவில்லை. கொக்கைப்போல் கொடுமை செய்பவர்களே தகுதியானவர்கள். நீங்கள் நன்மையை வெறுத் துத் தீமையை விரும்பினீர்கள் அதற்கான தண்டனையை அளிக்கவே கொக்கு வந்திருக் கிறது. அதனால் நீங்கள் துன்பத்தை அனு பவித்தே தீரவேண்டும்" என்றார்.

*[திருப்தியற்ற வாழ்க்கை தீமையாக முடி யும்.]*

## 20. புறாக்களின் வேண்டுகோள்

புறாக்களுக்குப் பருந்து தொல்லை கொடுத் துக் கொண்டேயிருந்தது. பருந்தின் தொல்லை

யிலிருந்து தங்களைப் பாதுகாக்கும்படி கழுகினிடம் புறாக்கள் கேட்டுக் கொண்டன. கழுகும் புறாக்களைக் காப்பாற்றுவதாக வாக்களித்தது. ஆனால் அது பருந்தின் தொல்லையிலிருந்து புறாக்களைக் காப்பாற்றாதது மாத்திரமல்ல, அவற்றை ஒழிக்கவும் தொடங்கிற்று. இரண்டு மாதங்களில் புறாக்களின் கூட்டத்தைப் பருந்து அழிப்பதைவிட அதிகமாக இரண்டு நாட்களில் கழுகு விட்டது.

[உதவிக்கு, வலியவர்களாகவும் கொடுமைக்காரர்களாகவும் உள்ளவர்களை நாடுவது நாசத்தையே விளைவிக்கும்.]

## 21. திருடர்களும் நாயும்

பல திருடர்கள் ஒரு வீட்டைக் கொள்ளையிட வந்தார்கள். அந்த வீட்டில் ஒரு நாய் இருந்தது. அது திருடர்களைக் கண்டதும் உரக்கக் குரைக்கத் தொடங்கிற்று. அப்போது திருடர்களில் ஒரு திருடன் நாயிடம் அன்பாகப் பேசி, ஒரு துண்டு ரொட்டியை அதற்குப் போட்டான். ரொட்டித் துண்டைத் தின்று நாய் குரைக்காமல் இருக்கும் என்று அவன் எண்ணி

நாயோ "வேண்டாம்! வேண்டாம்! எனக்கு இந்த லஞ்சம் வேண்டாம். ஒரு துண்டு ரொட்டிக்காக என் வாழ்நாள் முழுவதும் அனுபவிக்கும் சுகத்தை இழக்கமாட்டேன். என் எஜமானருக்குத் துரோகம் செய்ய மாட்டேன்" என்றது.

**[சிறு நன்மைகளுக்காக துரோகம் செய்ய நினைப்பவன் பிறகு வாழ்க்கை முழுவதும் வருந்த நேரிடும்.]**

## 22. ஓநாயும் பெண் பன்றியும்

ஒரு பெண் பன்றி ஏராள்மான குட்டிகளை போட்டு வளர்த்து வந்தது. அப்போது ஒரு ஓநாய் டம் சென்று "உன் குட்டிகளை நான் காப்பாற்றுகின்றேன்" என்று அன்பாகச்



சொல்லிற்று. உடனே பெண் பன்றி மிகவும் மரியாதையுடன் "ஐயா. உங்கள் அன்புக்கு வந்தனம். தாங்கள் தயவு செய்து தூர இருந்தே உதவி செய்யுங்கள். எவ்வளவு தூரம் தாங்கள்

விலகியிருக்கிறீர்களோ அவ்வளவும் எனக்கு நல்லது" என்றது.

**[கொடியவர்களின் உதவியை ஏற்காமல் இருப்பதே நன்மை.]**

## 23. ஒருநாள் தவறு

ஒரு வியாபாரியிடம் ஒரு கழுதை வேலை பார்த்து வந்தது. அதற்கு அதிக வயதாகி விட்டதாலும், கடுமையான உழைப்பினாலும் மிகவும் மெலிந்து விட்டது. ஒரு நாள் ஒரு பெரிய சுமையைத் தூக்கிக்கொண்டு வரும்போது கால் இடறி கீழே விழுந்து விட்டது. அதைக் கண்ட வியாபாரி இரக்கமில்லாமல் கழுதையை அடிக்க தொடங்கினன். அப்போது கழுதை வியாபாரியை நோக்கி "ஐயா! உலகத்தில நன்றியைக் காட்டுவதுதான் வழக்கம். நீங்களோ எதிர்மாருக நடந்து கொள்கிறீர்கள். நான் நன்ருக இருந்தவரை உங்களுக்கு வஞ்சகம் இல்லாமல் உழைத்திருக்கிறேன். தள்ளாத காலத்தில் நான் செய்த இந்தத் தவறுக்காக நீங்கள் என்னை அடிப்பது நல்லதல்ல" என்று சொல்லிஅழுதது.

**[நன்றியில்லாதவர்களுக்குச் செய்யும் வேலை நன்மையைக் கொடுக்காது]**

## 24. கழுதை, குரங்கு, அகழ் எலி

ஒரு கழுதையும், ஒரு வாலில்லாக் குரங்கும் தங்கள் குறைகளைச் சொல்லிக்கொண்டன. கழுதை தனக்குக் கொம்புகள் இல்லை என்று மிகவும் வருத்தப்பட்டது. குரங்கு தனக்கு வாலில்லை என்று முறையிட்டது. அப்போது அங்கிருந்த அகழ் எலி ஒன்று அங்கு வந்து "உங்களுக்கு கொம்பு இல்லையென்றும், வால் இல்லையென்றும் வருத்தப்படுவதை நிறுத்துங்கள். கண்ணில்லாத நாங்கள் உங்கள் இருவகையினரையும்விட வருத்தப்பட வேண்டியவர்கள். இதைக் கண்டாவது உங்கள் குறைகளை மறந்து சந்தோஷமாக இருங்கள்" என்றது.

[குறைகளுக்காக வருத்தப்படுவதை விட அதை மறந்து இருப்பதே நல்லது]

## 25. முயல்களின் தீர்மானம்

காட்டில் வாழ்ந்த முயல்களுக்கு வாழ்க்கையில் வெறுப்பு உண்டாயிற்று. அவை ஒன்று கூடி ஆலோசித்தன. கடைசியில் ஒரு முடிவிற்கு வந்தன. "நாம் மனிதர்கள், நாய்கள், கழுகுகள் ஆகியவற்றின் தயவினால் உயிர்வாழ்கிறோம்.

நமக்கு இவர்களைத் தவிர இன்னும் எத்தனையோ எதிரிகள் இருக்கிறார்கள். எப்போதும் நாம் எதற்கும் பயந்துதான் உயிர்வாழ வேண்டியிருக்கிறது. இவ்விதம் பயத்துடன் உயிர் வாழ்வதை விடச் சாவதே மேல். அதனால் நாம் அனைவரும் தண்ணீரில்



துவிடலா" மென்று தீர்மானித்தன. உடனே அத்தனை முயல்களும் அருகாமையில் இருந்த குளத்தை நோக்கிச் சென்றன. கரையில் இருந்த தவளைகள் வேகமாக வரும் முயல் கூட்டத்தைப் பார்த்து பயந்து நீரில் மறைந்தன. முயல்கள் குளத்தை நெருங்கியதும் அவை பாய்ந்து குளத்தில் குதிக்க ஆரம்பித்தன. இதைக் கண்ட அறிவுள்ள ஒரு முயல், மற்ற முயல்களைப் பார்த்து " சற்று பொறுங்கள். நாம் நினைப்பது போல் நமது நிலைமை அடியோடு மோசமாக இல்லை. நாம் மற்றவர்களுக்குப் பயப்படுகிறோம். நமக்கும் பயப்படும் பிராணிகளும் இருக்கின்றன. இதை இப்போது நீங்களே பார்த்திருக்கிறீர்கள்" என்றது.

உடனே எல்லா முயல்களும் தமது தீர்மானத்தை மாற்றிக்கொண்டு திரும்பின.

**[எளியவர்களுக்கு எளியவர்கள் உலகத்தில் இருக்கிறார்கள்]**

## 26. தாடி எங்கே?

ஒரு நாள் காலை வெள்ளாடு மேய்ச்சலுக்கு வெளியே போனது. போகுமுன் தன் குட்டியிடம் "நான் திரும்பி வரும்வரை கதவைத் திறக்காதே" என்று சொல்லிச் சென்றது. இதை ஒரு ஓநாய் தூரத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்தது. தாய் ஆடு சென்றதும் ஓநாய் வந்து கதவைத் தட்டிற்று. ஆட்டுக்குட்டி கதவைத் திறக்கவில்லை. 'நான் உன் தாயார்' என்று சொன்னது. அப்போதும் ஆட்டுக்குட்டி கதவைத் திறக்காமல் "நல்லது அம்மா. உன் தாடியைக் காட்டு. கதவைத் திறக்கிறேன்" என்றது. தன் தந்திரம் ஆட்டுக்குட்டியிடம் பலிக்காது எனத் தெரிந்த ஓநாய் ஓடிவிட்டது.

**[வஞ்சகர்களின் எண்ணத்தைக் அவர்கள் பேச்சிலேயே காணலாம்]**

# 27. இரண்டு விரோதிகள்

ஒரு பாம்பு ஒரு குடிசையின் வாயிற்படியின் கீழ் வசித்து வந்தது. குடிசையில் வசித்து வந்த குடியானவனின் குழந்தை ஒரு நாள் அந்தப் பாம்பை மிதித்துவிட்டது. பாம்பு வலி தாங்கமுடியாமல் குழந்தையைக் கடித்தது. அதனால் குழந்தை இறந்துவிட்டது குழந்தை இறந்தவருத்தத்தில் குடியானவன் கோபம் கொண்டு பாம்பை அடிக்க கோடாரியை



எடுத்து வீசி எறிந்தான். கோடாரி பாம்பின் மீது விழவில்லை. ஆனால் வாயில்படியில் விழுந்து பாம்பு வசித்த ஒரு பகுதியை உடைத்து விட்டது.

இந்த சம்பவம் நடந்து சில நாள் ஆகிவிட்டன. குடியானவனுக்கு மனம் மாறிற்று. அவன் பாம்புடன் சமாதானம் செய்துகொண்டு நட்பாக இருக்க விரும்பினான். அதைப் பாம்

பிடம் சொன்னான். அதைக் கேட்ட பாம்பு வேண்டாம். நாம் நட்புடன் இருக்கமுடியாது. உனக்கு உன் இறந்து போன குழந்தையும், எனக்கு படிக்கட்டில் ஏற்பட்ட சேதமும் நினைவில் இருந்துகொண்டேயிருக்கும். அதனால் யாருக்காவது மறுபடி சேதம் வரும். அதனால் நாம் இப்படி இருப்பதே நல்லது" என்றது.

**[விரோதிகள் ஒன்றுகூடி இருப்பதைவிட பிரிந்து வாழ்வதே நலமாகும்]**

## 28. குள்ளநரியும், கொக்கும்

ஒரு காட்டில் ஒரு குள்ளநரி வசித்து வந்தது. ஒரு நாள் ஒரு கொக்கை அது விருந்துக்கு அழைத்தது. கொக்கும் விருந்துக்கு வந்தது. குள்ளநரி விருந்துக்குப் பாயாசம் தயாரித்தது. பாயாசத்தை இரண்டு அகலமான தட்டுகளில் ஊற்றியது குள்ளநரி. பிறகு ஒரு தட்டை கொக்கின் முன் வைத்தது. மற்றதை அது எடுத்துக்கொண்டது. குள்ளநரியோ பாயாசத்தை நக்கி நக்கி உண்டது. கொக்கினால் அதைச் சாப்பிட முடியவில்லை. தன்னை ஏமாற்றி அவமானப்படுத்தவே குள்ளநரி விருந்துக்கு அழைத்திருக்கிறது. என்பதைக் கொக்கு

உணர்ந்தது. ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. விருந்து முடிந்ததும் விடை பெற்றுப் போய்விட்டது.

சில நாட்களுக்குப் பிறகு குள்ளநரியை கொக்கு விருந்துக்கு அழைத்தது. குள்ளநரியும் விருந்து சாப்பிட ஆவலோடு போயிற்று. அப்



போது கொக்கு விதவிதமான மாமிசங்களில் சூப் தயாரித்தது. அதை இரண்டு வாய் குறுகலாக உள்ள பானைகளில் ஊற்றியது. ஒரு பானையை நரியிடம் வைத்து அதைப் புசிக்கும்படி கேட்டுக்கொண்டது. மற்ற பானையைத் தன் முன் வைத்துக்கொண்டு மூக்கினால் மாமிசத் துண்டுகளை எடுத்துப் புசிக்கத் தொடங்கிற்று. நரியினால் பானையினுள் வாயைக்கூட விட முடியவில்லை. அப்போதுதான் அதற்கு முன்பு கொக்கிற்குச் செய்த அவமானம் நினைவிற்கு வந்தது.

**[மோசக்காரர்கள் தங்களிடம் மோசம் போனவர்களிடம் அவமானப் படுவதைவிட கேவலமானது வேறு ஒன்றும் இல்லை]**

# 29. பேராசைபிடித்த காக்கை

ஒரு காக்கைக்குத் தன் கருப்பு நிறத்தின் மீது வெறுப்பு உண்டாயிற்று. எல்லா பறவை களையும்விட அழகாகவும் சிறப்பாகவும் இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டது. உடனே அது வனத்திலுள்ள எல்லாப் பறவைகளின் சிறகுகளையும் சேகரித்து உடலில் குத்திக்கொண் டது. அப்போது அது ஒரு புதுமையான பறவைபோல் காணப்பட்டது. எல்லா பறவை களும் அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டன. அதன் அழகிற்காகப் பாராட்டின. அப்போது ஒரு பருந்து காக்கையின் தந்திரத்தை அறிந் தது அது மற்ற பறவைகளிடம் "சகோதரர் களே! மோசம் போகாதீர்கள். அந்தப் பறவை யிடமிருந்து உங்கள், உங்கள் சிறகுகளை நீங்கள் பறித்துக்கொள்ளுங்கள், பிறகு பார்க்கலாம்" என்று சொல்லி காக்கையின் உடலில் இருந்த தன் சிறகை பறித்துக்கொண்டது. அதைப் பின்பற்றி எல்லாப் பறவைகளும் காக்கையின் உடலில் இருந்த தங்கள் தங்கள் சிறகுகளைப் பற்றிக்கொண்டன. கடைசியில் காக்கை பழைய கருங் காக்காயாகவே இருந்துவிட்டது.

[வீண் ஆசை கூடாது.]

# 30. ஈயும், எறும்பும்.

ஒரு ஈயும் எறும்பும் யார் உயர்ந்தவர் என்று சர்ச்சை செய்தன. இரண்டும் தங்களை உயர்ந்தவர்களாகச் சொல்லிக் கொண்டன. முதலில் ஈ தன் பெருமையைக் கூறிற்று. "நான் அனுபவிக்காத சுகம் இந்த உலகத்தில் இல்லை. எந்த இடத்திலும் நான் இருப்பேன். எல்லா ஆலயங்களும் அரசர்களின் அரண்மனைகளும் எனக்குத் திறந்தே இருக்கின்றன. தெய்வங்களுக்கு அளிக்கப்படும் பலிகள், அரசரின் விருந்து ஆகியவற்றை நான் சுவைக்காமல் இருந்ததில்லை. இவை எனக்கு பணச்செலவோ, உடல் வருத்தமோ இல்லாமல் கிடைக்கின்றன. அரசர்களின் மணி மகுடங்கள் என் காலடியில் மிதிபடுகின்றன. அரசர்களுடைய மனைவிகளின் இதழ்களை முத்தமிடுகிறேன். இப்போது நீ என்ன சொல்கிறாய்? உனக்கு இவ்விதம் சுகம் கிடைக்கிறதா?" என்று ஈ கேட்டது.

அதற்கு எறும்பு. "வீண் பெருமைக் காரனே! ஒருவர் அழைத்துச் செல்லும் விருந்துக்கும் அழைக்காமல் செல்லும் விருந்திற்கும் உனக்கு வேற்றுமையே தெரியாது. மனிதர்களுக்கு உன் தொடர்பு பிடிக்கவில்லை. அதனு

லேயே உன்னைப் பிடித்தவுடன் கொன்றுவிடு கிறார்கள். நீ வரும் இடங்கள் அவர்களுக்கு வருத்தத்தை அளிக்கிறது. உன்னைத் தீண்டிஞ லேயே கையைச் சுத்தம்செய்ய வேண்டியிருக் கிறது. நீ புகழும் முத்தமோ சற்றுமுன் நீ தீண்டிவந்த குப்பை மேட்டின் நாற்றத்தையே வெளிப்படுத்துவதாக இருக்கும். நானே உழைத் துச் சம்பாதிக்கிறேன். அதுமாத்திரமல்ல. மழைகாலத்தில் அவதிப்படாமல் இருக்க வெயில் காலத்தில் நேர்மையாக உழைக்கிறேன். நீயோ தவருன வழியில் ஒரு ஆண்டில் பாதி காலம் வெறியுடன் சுற்றிக் கழிக்கிருய். மீதிப் பாதிக் காலத்தைப் பட்டினியுடன் வாடி வதங் குகிருய்'' என்றது. இதைக் கேட்ட ஈ வெட்க முற்றது.

**[இன்பமானது, எளிமையிலும் கடமையிலுமே இருக்கிறது]**

## 31. தவளையும், எருதும்.

ஒரு பெரிய எருது புல் மேய்ந்துகொண் டிருந்தது. அதன் பக்கத்தில் ஒரு தவளை தத் திக்கொண்டு வந்தது. எருதின் உருவத்தைப் பார்த்து அது ஆச்சரியமும், பொருமையும்



அடைந்தது. உடனே அது தன் கூட்டத்தாரை அழைத்தது.

"இதோபாருங்கள். நான் இந்த எருதைப் போல் பருமனுகப் போகிறேன்" என்று சொல்லி மூச்சை அடக்கி உடலை உப்பச்செய்தது. தனது கூட்டத்தார் எவ்வளவு சொல்லியும் கேளாமல் மேலும் மேலும் உப்பிக் கடைசியில் அந்தத் தவளை வயிறு வெடித்து செத்தேவிட்டது.

**[அறிவற்ற செயல் அழிவைத்தரும்.]**

## 32. வைத்தியனுக்கு வெகுமதி

ஒரு கழுதையின் காலில் முள் தைத்து விட்டது. அது ஒரு ஓநாயிடம் சென்று தனக்கு வைத்தியம் செய்ய ஒருவன் வேண்டும் என்று கேட்டது. ஓநாயோ "நானே உனக்கு வைத்தியம் செய்கிறேன்" என்று சொல்லிற்று. அதுவே கழுதையின் காலில் தைத்த முள்ளை எடுத்து, ரணத்தையும் ஆற்றியது. ஆனால் அது எந்த எண்ணத்துடன் வைத்தியம் செய்யவந்தது என்பதைக் கழுதை அறிந்தது. உடனே

அது பின்னங்காலால் ஓநாயின் தலையில் ஓங்கி ஒரு உதை விட்டது. உதைப்பட்ட ஓநாய் அலறிக்கொண்டே அங்கிருந்து ஓடிச் சென்றது.

[**தீயவர்களுக்குத் தீமை செய்வதே நியாயம்**]

## 33. கர்வங்கொண்ட குதிரை

ஒரு குதிரை தங்கத் தகடுகள் அடித்த சேணம் பூண்டு, ஜரிகை வேலைப்பாடு செய்த பட்டுத் துணியைப் போர்த்திக்கொண்டு வழி நடந்துவந்தது. அதே வழியில் ஒரு கழுதை விறகு சுமையைத் தூக்கிக்கொண்டு வந்தது. அதைக் கண்ட குதிரை கர்வத்துடன் "டேய் முட்டாள் கழுதையே, உனக்கு நான் யார் என்று தெரியவில்லையா. என் தங்க சேணத்தைப் பார். பட்டுப் படுதாவைப் பார். இதி லிருந்து என் எஜமானர் எப்படிப்பட்டவர் என்று தெரியவில்லையா? எஜமானர் என்மீது சவாரி செய்யும்போது இந்த அரசாங்கமே என்னுடைய முதுகில் இருக்குமே! போடா, வழியைவிட்டு விலகிப்போ!" என்றது.

குதிரையின் ஆடம்பரமான அலங்காரத் தைப்பார்த்து கழுதைக்கு பொறாமையும் பயமும் ஏற்பட்டது. அது வழியை விட்டு விலகித்

தூரச் சென்று நின்றுகொண்டது, குதிரையும் கர்வத்துடன் நடந்துகொண்டு போயிற்று.

இந்தச் சம்பவம் நடந்து சில காலத்திற்குப் பிறகு ஒரு நாள் கழுதை வழக்கம்போல் விறகு சுமையுடன் வந்துகொண்டிருந்தது. அப்போது அதன் எதிரே ஒரு குதிரை குப்பை நிறைந்த வண்டியை இழுத்துக்கொண்டு வந்தது. அந்தக் குதிரையைப் பார்த்ததுமே, அது முன்பு கர்வத்துடன் வழியைவிட்டு விலகிப் போகும்படி சொன்னது, என்று கழுதைக்கு நினைவு வந்தது. முன்பு பொறுமைகொண்டிருந்தாலும் கழுதை இப்போது வருத்தமடைந்தது. அது குதிரையை அணுகி எப்படி இந்த இழிநிலை ஏற்பட்டது என்று கேட்டது.

குதிரை கர்வம் இல்லாமல் வருத்தத்துடன் "இது போர் செய்யச் சென்றதனால் ஏற்பட்டது. முன்பு நீ பார்த்தபோது நான் சேனாதிபதியின் குதிரையாக இருந்தேன். அவர் போருக்குச் சென்ற சமயம் என் காலில் காயம் பட்டுவிட்டது. அதனால் நான் நொண்டியாகிவிட்டேன். இனி போருக்கு நான் பயனில்லை என்று குப்பை வண்டி இழுக்க அனுப்பிவிட்டார்கள்" என்றது.

**[ஆடம்பரத்தில் அறிவை இழப்பவர்கள், பிறகு வருத்தப்பட நேரிடும்]**

# 34. வௌவாலின் தந்திரம்

ஒரு காட்டுப் பூனை ஒரு வௌவாலைப் பிடித்துக்கொண்டது. அப்போது வௌவால் தன் உயிருக்காக பூனையிடம் கெஞ்சிற்று. தன்னை விட்டுவிடும்படி கேட்டது. ஆனால் பூனையோ, "மாட்டேன். உன்னை விடமாட்டேன். பறவைகளிடம் நான் தயை காட்டமாட்டேன்" என்றது.

அதைக் கேட்ட வௌவால் "என்னைப் பாருங்கள்! நான் பறவை இல்லை. நான் சுண்டெலி என்று கூறிற்று. பூனையும் அதை விட்டு விட்டது.

சில நாட்களுக்குப் பிறகு அதே வௌவால் மீண்டும் அந்தப் பூனையிடம் அகப்பட்டுக்கொண்டது. வௌவால் மீண்டும் உயிருக்காகக் கெஞ்சிற்று. அப்போது பூனை "நான் எலிகளுக்குக் கருணை காட்டமாட்டேன்" என்றது.

உடனே வௌவால் "என் சிறகுகளைப் பாருங்கள். நான் பறவை என்பது சொல்லாமலே தெரியவரும்" என்று கூறி இரண்டாம் முறையும் பூனையிடமிருந்து தப்பித்துக்கொண்டது.

**[ஆபத்துக்காலத்தில் சிறு பொய்சொல்வது குற்றமாகாது.]**

# 35. வௌவாலுக்குத் தண்டனை

ஒரு காலத்தில் பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் கடுமையான போர் நடந்தது. அப்போது வௌவால் எந்தக் கட்சியிலும் சேராமல் இருந்தது. போரில் மிருகங்கள் வெற்றியடைந்தன. உடனே வௌவால் வெற்றியடைந்த மிருகங்களுடன் போய்ச் சேர்ந்து கொண்டது.



சில நாட்களுக்குப் பிறகு பறவைகள் சிதறிப் போன தங்கள் படையை ஒன்று சேர்த்து மீண்டும் மிருகங்களோடு போர் செய்தன. இச்சமயம் பறவைகள் வெற்றியடைந்தன. உடனே வௌவால் மிருகங்களை விட்டு பறவைகள் கூட்டத்தில் சேரவந்தது. பறவைகளோ அதைத் தங்களுடன் சேர அனுமதிக்கவில்லை. அது மாத்திரமின்றி சபை கூட்டின. அதில் வௌவாலைப்பற்றிய விசாரணை நடந்தது. முதலில் வௌவால துரோகி என்றும், அது இனி

பகலில் தலைகாட்டாமல் எங்காவது போய் வசிக்க வேண்டும் என்றும் தீர்ப்புக் கூறின.

*[சுய நலத்தையே பெரிதாக எண்ணுபவன் அனைவராலும் இகழப்படுவான்.]*

## 36. தீமை செய்தால் தீமை விளையும்

ஒரு ஓநாய் ஏராளமாக ஆகாரங்களைச் சேகரித்து வைத்திருந்தது. அதை யாராவது எடுத்துச் சென்றுவிடுவார்களோ என்று பயந் தது. அதனால் அது தன் இருப்பிடத்தை விட்டு வெளியே போகாமல் இருந்தது. ஒரு குள்ள நரிக்கு ஓநாய் ஏராளமாக ஆகாரங்களைச் சேக ரித்து வைத்திருப்பது தெரிந்தது. அது எப்படி யாவது அந்த உணவுகளை அடையவேண்டும் என்று தீர்மானித்தது. அந்த எண்ணத்தோடு ஓநாயின் குகைக்கு வந்தது. ஓநாயைப்பார்த்து "நண்பா எங்கே உன்னை வெளியில் காணப வில்லையே. உன்னைக் கண்டு வெகு நாட்களா கின்றனவே. வா வெளியே போய்வரலாம் என்றது.

அதற்கு ஓநாய் "நீ சொல்வது உண்மை தான். என் உடம்பு சரியாக இல்லை. என்னால்

இப்போது வேட்டைக்கு வர முடியாது. நான் குணமாக வேண்டும் என்று நீ கடவுளைப் பிரார்த்தனை செய்" என்றது.

நரிக்குத் தன் தந்திரம் பலிக்கவில்லை என்று தெரிந்தது. ஆனால் அதற்கு ஓநாயிடம் உள்ள இரையை எப்படியாவது அடைய வேண்டும் என்ற பேராசை ஏற்பட்டது. அதனால் அது ஒரு சிப்பாயிடம் போய்ச் சொல்லி, ஓநாய் இருக்குமிடத்தையும் அவனுக்குக் காட்டிற்று. சிப்பாய் வந்து ஓநாயைக் கொன்றுவிட்டுச் சென்றான். உடனே நரி மகிழ்ச்சியுடன் ஓநாய் சேர்த்து வைத்திருந்த இரையை அடைய குகையில் போய் தங்கிற்று. ஆனால் மறுநாள் அதே சிப்பாய் அந்தக் குகைக்கு வந்து நரியைக் கொன்றுவிட்டான்.



**[கெட்ட எண்ணக்காரனுக்கு அவர்கள் எண்ணங்களே கெடுதியை விளைவித்துவிடும்.]**

# 37. நண்பனும் விரோதியும்.

ஒரு கலைமான் தண்ணீர் குடிக்க ஒரு ஓடைக்குச் சென்றது. அது தண்ணீர் குடிக்கும் போது ஓடையில் அதன் உருவத்தைக் கண்டது. அப்போது அது தலையில் இருக்கும் நேர்த்தியான கொம்புகளைப் பார்த்தது. உடனே அது தன் கால்களை உற்றுக் கவனித்தது. கால்கள் குச்சி குச்சியாகவும், கொம்புகள் பல கிளைகளுடன் இருப்பதைக் கண்டு வருத்தத்துடன் "என் கொம்புகளைப் போல் கால்கள் [illegible]



தால் நான் யாருக்குமே பயப்பட மாட்டேன்" என்று சொல்லிக்கொண்டது. அதே சமயம் வேட்டைக்காரன் குதிரைமீது வருவதும் பல வேட்டை நாய்கள் குரைத்துக் கொண்டு ஓடிவரும் சப்தமும் கேட்டது. உடனே மான் பயந்து ஓடத்தொடங்கிற்று. ஆனால் அது மறைந்துகொள்ள ஒரு புதரை நெருங்கிய சமயம் அதன் கொம்புகள் அதில்

மாட்டிக்கொண்டன. அதே சமயம் வேட்டை நாய்கள் அதன் மேல் பாய்ந்து கடித்துவிட்டன. அந்த மான் உயிர் போகும் சமயம் "நண்பர்களை விரோதிகளாகவும், விரோதிகளை நண்பர்களாகவும் நான் நினைத்ததால் இந்த கதி எனக்கு ஏற்பட்டது. நான் ஆசைப்பட்ட கொம்புகளே என்னைக் காட்டிக்கொடுத்துவிட்டன. நான் அலட்சியப்படுத்திய கால்களே என்னைக் காப்பாற்ற முயன்றன." என்று நினைத்து உயிர் விட்டது.

**[ஆபத்தில் சிக்கவைக்கும் ஆடம்பரங்களை விட உதவியாக இருக்கும் எளிமையே மேலானது.]**

## 38. அரமும், பாம்பும்.

ஒரு பாம்பு கொல்லன் பட்டறையினுள் சென்றது. அங்கு காணப்பட்ட அரத்தை நாவினால் நக்கத் தொடங்கிற்று. சிறிது நேரத்தில் அதன் நாக்கிலிருந்து ரத்தம் வெளிப்பட்டது. அது அரத்திலிருந்துதான் வருகிறது என்று எண்ணி பாம்பு உற்சாகமாக நக்க ஆரம்பித்தது. மேலும் சிறிது நேரத்தில், அதற்கு நக்க முடியாமல் போனதும், அரத்தை அது கடித்தது. அதனால் அதன் பற்களும் போய்விட்டன.

கடைசியில் அது தன் உயிரையும் காப்பாற்றிக் கொள்ள முடியாமல் போய்விட்டது.

**[எதிரியின் வலிமையை உணராதவன் அழிய வேண்டியதுதான்.]**

## 39. ஓநாயின் சமாதானம்

ஒரு காலத்தில் ஓநாய்களுக்கும் ஆடுகளுக்கும் போர் நடந்தது. அந்தப் போரில் ஆடுகளுக்கு நாய்கள் உதவியாக இருந்தன. அதனால் ஓநாய்களால் ஆடுகளை வெற்றிகொள்ள முடியவில்லை. ஓநாய்கள் வெகுவாக யோசித்து ஒரு முடிவிற்கு வந்தன. அவை ஆடுகளோடு சமாதானம் பேச விருப்புவதாகவும், பேச்சு முடியும் வரை ஓநாய்களுக்காக அதன் குட்டிகளும், ஆடுகளுக்காக நாய்களும் பணயமாக வைத்துக் கொள்ளலாம் என்று கூறின. இதற்கு ஆடுகள் சம்மதித்தன. ஆனால் சமாதானம் பேசும் சமயம் ஓநாய்க்குட்டிகள் கத்தத் தொடங்கின. இதைக் கண்ட நாய்கள் "இது நியாயத்திற்கு விரோதமானது. நம்பிக்கைத் துரோகமானது" என்று கூறின. அதே சமயம் உதவியற்ற நிலையில் இருந்த ஆடுகளின் மீது ஓநாய்கள் பாய்ந்து கொன்று போட்டன. எச்சரிக்கையோடு இல்

லாத ஆடுகளும் தங்கள் அறிவீனத்திற்காக வருந்தி இறந்தன.

**[இயற்கையிலேயே விரோதிகளாக உள்ளவர்களோடு நட்பாக இருக்க முயல்வது அழிவிற்கு அடிகோலுவதாகும்.]**

## 40. காட்டின் தாராளம்

ஒரு விறகுவெட்டி காட்டிற்குச் சென்றான். அவனிடம் கைப்பிடியில்லா கோடாரி ஒன்று இருந்தது. அவன் காட்டை அடைந்ததும் மரங்களைப் பார்த்து என் கோடாரியின் கைப்பிடிக்குச் சிறிது மரம் கொடுங்கள் என்று கெஞ்சிக் கேட்டான். அவன் கேட்டது பெரியதாக இல்லாததால் உடனே மரங்கள் சிறிய கிளையைக் கொடுத்தன. அதனால் கோடாரிக்குக் கைப்பிடி போட்டான். பிறகு விறகுவெட்டி அதை உபயோகித்து காடு முழுவதையும் அழிக்க ஆரம்பித்தான். அப்போது மரங்கள் வருத்தத்துடன் "நாம் கொடுத்த கைப்பிடியை வைத்துக் கொண்டே நம்மை அழிக்கிறான். அறியாமையால் அழிந்து போகும்போது பேசாமல் இருக்க வேண்டியதுதான். அதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாது" என்று சொல்லிக் கொண்டன.

*[தன் அழிவிற்குத் தானே காரணமாவதைப் போன்ற வருந்தத்தக்கது வேறு ஒன்றுமில்லை.]*

## 41. உருப்புகளின் போர் முரசு

ஒரு சமயம் உடலின் மற்ற உருப்புக்கள், வயிற்றிற்கு எதிராகக் கலகம் செய்யத் தொடங்கின. அந்தக் கலகத்திற்குக் கைகளும் கால்களுமே முதன்மையாக இருந்தன. அவை வயிற்றினை ஏளனம் செய்து "உன்னை சோம்பேறித் தனமாக வைத்து வேண்டியவைகளைக் கொடுக்கிறோம். உனக்காக கடுமையாக உழைத்து உன்னைக் காப்பாற்றுகிறோம். அது மட்டுமல்ல, உன்னுடைய பெரிய பாரத்தை சுமந்து கொண்டு விருந்துகளுக்கு செல்கிறோம். இவ்விதம் நாங்கள் உனக்கு அடிமையைப்போல் ஏன் இருக்கவேண்டும் என்பதுதான் தெரியவில்லை. மேலும் உனக்கு ஏற்படும் நோய்களுக்காக நாங்களும் அவதிப்பட வேண்டியிருக்கிறது. இனி உனக்கு நாங்கள் அடிமையாக இருக்க முடியாது. உன் தொல்லைகளில் நாங்கள் பங்கு எடுத்துக்கொள்ளவும் முடியாது. இனி உனக்கு வேண்டியதை நீயே தேடிக்கொள்" என்றன. அப்போதிலிருந்து மற்ற உருப்புகள் வேலை செய்வதை நிறுத்திவிட்டன.

கால்கள் நடக்க மறுத்தன. கைகள் எந்த வேலையையும் செய்யாமல் சும்மா இருந்தது. வாயோ கை எடுத்து வந்து கொடுக்காமல் ஆகாரத்தை உண்ண மறுத்தது. பற்களும் அப்படியே செய்தன. எல்லா அவயங்களும் வேலை செய்வதை நிறுத்தின. இவ்விதமே சில நாட்கள் சென்றன. இதனால் உடலின் உருப்புகளுடைய பலம் குறையத் தொடங்கின. இதை கண்டு அவை ஆச்சரியமடைந்தன. கைகள் பலம் இழந்து மெலிந்துவிட்டன. அவற்றால் நேராக நீட்டவும் முடியவில்லை. கால்கள் நிற்கவும் சக்தியற்றுப் போயின. இதே போல ஒவ்வொரு அவயவங்களும் பலமிழந்து வேலை செய்ய முடியாத நிலைக்கு வந்தன. அப்போதுதான் அவற்றிற்குத் தங்கள் குற்றம் தெரியவந்தது. கடைசியில் அவை வேலை செய்ய ஆரம்பித்தன. ஆனால் அவற்றால் ஒன்றும் இயலவில்லை. அச்சமயம் அவை வருத்தத்துடன் "ஐயோ காலம் கடந்து விட்டதே." என்று புலம்பின. பல நாட்கள் வயிறு பட்டினியாக இருந்ததால் அதனால் வேலை செய்வது மிகவும் கஷ்டமாக இருந்தது. வயிறு தன் வேலையைத் தொடங்க முடியவில்லை. அதனால் எல்லா உருப்புகளும் சேர்ந்து இறக்க நேரிட்டன.

**[கடமையை உணராமல் தவறான எண்ணங் கொள்வது அழிவையே அளிக்கும்.]**

# 42 வானம்பாடியும் அதன் குஞ்சுகளும்

பயிர்கள் அறுவடைக்குப் பக்குவமாக இருக்கும் ஒரு நிலத்தில் வானம்பாடி தன் குஞ்சுகளுடன் வசித்து வந்தது. அது ஒருநாள் இரை தேடப் புறப்படுமுன் தன்னுடைய குஞ்சுகளிடம் "நான் திரும்பி வரும்வரை கேட்பதையும் பார்ப்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நான் வந்ததும் நடந்தவற்றைச் சொல்ல



வேண்டும்" என்றது. மாலையானதும் வானம்பாடி திரும்பி வந்து குஞ்சுகளிடம் என்ன நடந்தது என்று கேட்டது. "இந்த நிலத்தின் சொந்தக்காரன் வந்திருந்தான். பக்கத்து நிலத்துக் காரனை அறுவடைக்கு உதவி செய்ய நாளை வரும்படி கேட்டுக்கொண்டான்" என்று குஞ்சுகள் கூறின. அதற்கு வானம்பாடி "இன்னும் அபாயமில்லை" என்று சொல்லிற்று.

மறுநாள் மாலை வானம்பாடி இரை தேடித் திரும்பிய போது என்ன நடந்தது என்று குஞ்சுகளிடம் கேட்டது. “இன்றைக்கும் சொந்தக்காரன் வந்திருந்தான். அவன் தன் நண்பர்களை நாளைக்கு உதவி செய்ய வரும்படி சொன்னான்” என்று குஞ்சுகள் கூறின.

“நல்லது இதுவும் அபாயமானதல்ல” என்று வானம்பாடி கூறிற்று. ஆனால் மூன்றாவது நாளோ அது திரும்பி வந்ததும் குஞ்சுகள் “இன்று சொந்தக்காரனும் அவன் பிள்ளையும் வந்திருந்தார்கள். நாளை காலை அவர்களே அறுவடை செய்ய வருவதாகக் கூறினார்கள்” என்றன. அப்போது வானம்பாடி “நம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய நேரம் வந்துவிட்டது. நிலத்தின் சொந்தக்காரன் பக்கத்து நிலத்தானையும், நண்பர்களையும் நம்பிய வரை பயப்பட வேண்டிய அவசியம் இருக்கவில்லை. இப்போது அவனே தன் பிள்ளைகளுடன் வரத் தீர்மானித்து விட்டான். இது அவனுடைய சொந்த வேலை. அதனால் அவன் கட்டாயம் வந்தே தீருவான்” என்று தன் குஞ்சுகளை அழைத்துக் கொண்டு வேறிடம் சென்று விட்டது.

**[பிறர் உதவியை நாடாமல் தன் வேலைகளைத் தானே செய்பவன்தான் அறிவாளி.]**

# 43. சிங்கமும் நரியும்

ஒரு சிங்கம் அதிக நோய்வாய்ப்பட்டு குகையில் கிடந்தது. ஆகையால் அதனால் வெளியே சென்று வேட்டையாட முடியவில்லை. அது காட்டிலுள்ள மிருகங்களை ஒவ்வொன்றாக தன் குகைக்கு வரச்சொல்லி கொன்று தின்று வந்தது. அவைகளில் நரி தன்னைக் காண வரவில்லைஎன்று குறைபட்டுக் கொண்டது. நரி வந்திருந்தால் எனக்குச் சந்தோஷமாக இருக்கும் என்று



சொல்லி அனுப்பிற்று. நரியும் அதைக் கேட்டு குகைக்கு வெளியே வந்து நின்றது. சிங்கத்தின் உடல் நலம் எப்படி என்று கேட்டது. அதற்குச் சிங்கம் "நண்பனே ஏன் வெளியிலேயே நிற்கிறாய்? உள்ளே வா" என்றது.

உடனே நரி "மன்னிக்கவும். தங்கள் அரண்மனைக்குள் விலங்குகள் போவதற்கான காலடிகள் தென்படுகின்றன. ஆனால் ஒரு விலங்காவது திரும்பி வந்ததற்குச் சின்னமே காணப்

படவில்லை. நான் எப்படி உள்ளே வரமுடியும்'' என்று சொல்லி ஓடியே போய்விட்டது.

**[அறிவாளிகள் வஞ்சகமான பேச்சில் மயங்க மாட்டார்கள்.]**

## 44. ஆத்திரம் அறிவை மயக்கும்

ஒரு குதிரை தண்ணீர் குடிக்க ஒரு ஓடைக்குச் சென்றது. அங்கு ஒரு ஆண் பன்றி தண்ணீரைக் கலக்கவேண்டாம் என்று சொல்லிற்று. உடனே இரண்டிற்கும் சண்டை மூண்டது. பன்றியுடன் குதிரையினுல் சண்டை போட முடியவில்லை. அதற்காக எதிரியை சும்மா விடவும் அது விரும்பவில்லை. அது மனிதனிடம் சென்று தனக்கு உதவி செய்யும்படி கேட்டுக் கொண்டது. மனிதனும் சிலவற்றைக் கூறி அதற்குச் சம்மதிப்பதானுல் உதவி செய்ய வருகிறேன் என்ருன். குதிரையும் அதற்குச் சம்மதித்தது. உடனே மனிதன் கையில் ஆயுதம் ஏந்தி குதிரைமீது ஏறிக்கொண்டான். குதிரையும் அவனைச் சுமந்து கொண்டு பன்றியிருக்கும் இடத்திற்கு வந்தது. அதன் கண் முன்பாக எதிரியைக் கொல்வதைக் கண்டு மகிழ்ந்தது. ஆனுல் அது மனிதனிடம் விடைபெறும் போது அவன், "நீ என்னிடம் வேலை செய்ய வேண்டி

நீ என் லாயத்திலேயே இரு" என்று குதிரையை லாயத்தில் கொண்டு கட்டினான். குதிரை உடனே தன் ஆத்திரத்தால் தன் சுதந்தரத்தை இழந்ததை உணர்ந்து வருத்தப்பட்டது.

**[ஒருவனை ஒழிக்க வேறு ஒருவனை நாடுவது போன்ற அறிவீனம் வேறு இல்லை.]**

## 45. திருடர்களும் கசாப்புக்காரனும்

ஒரு கசாப்புக் கடைக்கு இரண்டு திருடர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவன் ஒரு துண்டு மாமிசத்தை எடுத்து மற்றவனிடம் கொடுத்தான். இதைக் கசாப்புக்காரன் அறிந்து அவர்கள்மீது திருட்டுக் குற்றம் சாட்டினான். அப்போது மாமிசத் துண்டை எடுத்தவன் அது தன்னிடம் இல்லை என்றான். மாமிசத் துண்டை வைத்திருந்தவனோ அதை அவன் திருடவில்லை என்று சொன்னான். உடனே கசாப்புக்காரன் " நல்லது. இப்படிப்பட்ட மோசங்களும் பொய்களும் மனிதர்களிடத்தில் மறைக்கலாம். ஆனால் இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கும் மேலே உள்ள அந்தக் கண்களை யாராலும் மறைக்க முடியாது" என்றான்.

[மனிதர்களை ஏமாற்றலாம். கடவுளை ஏமாற்ற முடியாது.]

## 46. பூனைக் குணம்.

ஒரு வாலிபனுக்கு ஒரு பூனையின்மீது ஆசை ஏற்பட்டது. அவன் வீனஸ் தேவதையிடம் அந்தப் பூனையை ஒரு யுவதியாகச் செய்து தரும் படி வேண்டிக்கொண்டான். வீனஸ் தேவதை யும் அவன் வேண்டுகோளின்படி பூனையை அழ கிய யுவதியாகச் செய்தது. வாலிபன் அந்த பூனை யுவதியை அழைத்துக்கொண்டு தன் அறைக்குச் சென்றான். அவளைக் கட்டிலில் உட்காரச் செய்தபோது வீனஸ் தேவதைக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. உருவம் மாறிய பூனைக்கு குணமும் மாறியிருக்கிறதா என்று பார்க்க விரும்பிற்று. அது ஒரு சுண்டெலியை பூனையின் முன் ஓடவிட்டது. அழகிய யுவதி யாக மாறிய பூனை தன்னை மறந்து எலியைப் பிடிக்க எழுந்து ஓடிற்று. அதைக் கண்ட வீனஸ் தேவதை கோபங்கொண்டு மீண்டும் யுவதியைப் பூனையாக்கிவிட்டது.

[பிறவிக்குணம் போகாது.]

# 47. ஒற்றுமையின் சக்தி.

ஒரு குடியானவனுக்கு பல பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் ஒற்றுமையின்றி எப்போதும் சண்டை போட்டுக்கொண்டிருந்தனர். குடியானவன் எவ்வளவோ சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை. குடியானவனுக்கும் வயதாகி விட்டது. அவனுக்கு என்ன செய்வது என்றே



அவன் நன்ருக யோசித்து ஒரு முடிவிற்கு வந்தான். தன் பிள்ளைகளை அழைத்தான். ஒரு கட்டு சுள்ளிகளை எடுத்துவரும்படி சொன்னுன். பிள்ளைகளும் ஒரு கட்டு சுள்ளிகளை எடுத்து வந்தார்கள். குடியானவன் ஒவ்வொரு பிள்ளைகளாக சுள்ளிக் கட்டை அப்படியே ஒடிக்கும்படி கட்டளையிட்டான். ஒவ்வொருவரும் எவ்வளவோ முயற்சித்தும் சுள்ளிக் கட்டை முறிக்க முடியவில்லை. உடனே குடியானவன் "நல்லது. கட்டை அவிழ்த்து ஒவ்வொரு சுள்ளியாக ஒடியுங்கள்" என்று சொன்னுன்.

பிள்ளைகளும் தகப்பனார் கூறிய விதம் சுள்ளிகளை எளிதில் ஒடித்துவிட்டார்கள். அப்போது குடியானவன் தன் பிள்ளைகளைப்பார்த்து "பிள்ளைகளே உங்களுடைய நிலைமையும் சுள்ளிக் கட்டை போன்றதுதான். நீங்கள் ஒற்றுமையுடன் இருந்தால் மகிழ்ச்சியுடன் வாழ்வீர்கள். பிரிந்து வாழ்ந்தீர்களோ சுள்ளிகளைப்போல அழிந்துவிடுவீர்கள்" என்றார். பிள்ளைகளுக்கும் புத்தி வந்தது. "இனி எப்போதும் ஒற்றுமையாக இருப்போம்" என்றார்கள்.

**[ஒன்றுபட்டால் உலகை ஆளலாம்; ஒற்றுமை நீங்கிறுல் உடனே அழியலாம்.]**

## 48. குதிரையும் கழுதையும்.

ஒரு வியாபாரியிடம் ஒரு குதிரையும் கழுதையும் இருந்தன. இரண்டும் சிநேகமாயிருந்தன. ஒரு சமயம் வியாபாரி குதிரையின் முதுகிலும் கழுதையின் முதுகிலும் பாரத்தை ஏற்றிக்கொண்டு வெளியூர் சென்றான். அச்சமயம் கழுதைக்கு மிகவும் களைப்பாக இருந்தது. அது தன் நண்பனான குதிரையினிடம் "நண்பா! என் சுமையைச் சிறிது தூரம் எடுத்து வா! எனக்குக் களைப்பாக இருக்கிறது. பிறகு மற்றபடி நான் எடுத்துக் கொள்கிறேன்.

நீ உதவி செய்யாவிட்டால் நான் இறந்துவிடு வேன்" என்றது. குதிரையோ உதவி செய்ய சம்மதிக்கவில்லை. கழுதையால் சுமையைத் தூக்கிக் கொண்டு நடக்கவும் முடியவில்லை. அது



தலைகுப்புற விழுந்து இறந்துவிட்டது. உடனே அதன் சொந்தக்காரனை வியாபாரி சுமையை குதிரைமீது ஏற்றினன். அத்துடன் கழுதை யின் தோலையும் உரித்து, அதையும் மேலே வைத்துக் கட்டினன். இதைக் கண்ட குதிரை வருத்தத்துடன் "ஐயோ! என் எளிய நண்ப னுக்கு உதவி செய்யாததால் எனக்கு இந்தக் கதி ஏற்பட்டது. அதன் சுமையுடன் அதனுடைய தோலையும் சுமக்க வேண்டியதாயிற்று" என்று சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டது.

**[ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழ் வதே சிறந்தது.]**

## 49. ஒற்றுமை இல்லாத தொழில்.

ஒரு அடுப்புக்கரி வியாபாரிக்கு ஒரு துணி வெளிப்பவன் நண்பனாக இருந்தான். அவனை தன்னுடன் வந்து வசிக்கும்படி கரி வியாபாரி கேட்டுக்கொண்டான். அதற்குத் துணி வெளுப்பவன் "நண்பா! உன்னுடைய அன்புக்கு வந்தனம். ஆனால் நாம் இருவரும் ஒரே வீட்டில் வசிப்பது முடியாத காரியம். நான் வெள்ளை வெளுத்து வைப்பதை யெல்லாம் நீ கரியாக்கி விடுவாய்" என்றான்.

*[நட்பிற்கும் தொழிலுக்கும் உள்ள வேற்றுமையை உணரவேண்டும்.]*

## 50. அவன் செய்த குற்றம்.

ஒரு சமயம் இரு தேசத்திடையே சண்டை நடந்தது. அதில் ஒரு படையின் முன்னால் கொம்பு ஊதுபவன் எதிரிகளிடம் கைதாக அகப்பட்டுக்கொண்டான். அவனை எதிரிகள் தூக்கில்போட முயன்றபோது அவன் "ஐயா நான் ஒருவனைக் கொல்லவும் கத்தியை எடுத்ததில்லை.. என்னைக் கொல்லாதீர்கள்" என்று கெஞ்சினான் அதற்கு எதிர்கள் "நீ கத்தியை எடுக்கவில்லை என்பதை நாங்கள் ஒப்புக்கொள்

கிறேம். ஆனால் நீ மற்றவர்களைச் சண்டை செய்யும்படி கொம்பு ஊதித் தூண்டியவன். உன்னைச் சும்மா விடக்கூடாது. நீ சாகவேண்டியதுதான்'' என்றனர்.

**[ஒரு குற்றத்தைச் செய்வதைவிட அதைச் செய்யப் பலரைத் தூண்டுவது பெரிய குற்றமாகும்.]**

## 51. கண்ணுள சுதந்திரம்.

ஒரு ஓநாய் உணவு கிடைக்காமல் பட்டினியுடன் வாடிக்கொண்டிருந்தது. அப்போது அது இருக்குமிடத்திற்கு அருகில் ஒரு கொழுத்த நாய் வந்தது. அதைக் கண்ட ஓநாய், அவ்விதம் நாய் நல்ல நிலைமையில் இருக்க என்ன காரணம் என்று கேட்டது. நாய் கர்வத்துடன் "நான் என் எஜமானன் வீட்டைக் காக்கிறேன். திருடர்கள் வந்தால் அவர்களை விரட்டி அடிக்கிறேன். என் வேலைகளுக்காக எனக்கு எஜமானர் நல்ல ஆகாரமும், இருக்க நல்ல இடமும் கொடுத்திருக்கிறார். நீயும் என்னுடன் வருகிறாயா? என்னைப்போல் நடந்துகொண்டால் உனக்கும் என் எஜமானன் நல்ல சாப்பாடு கொடுப்பார். நல்ல விதமாக இருக்கச் செய்வார்'' என்றது. ஓநாய் அதனுடன் வரச் சம்ம

ஒன்ருகச் சேர்ந்து வழி நடக்கும்போது நாயின் கழுத்தைச் சுற்றி வடு ஒன்று இருப்பதை ஓநாய் பார்த்துவிட்டது. உடனே அது நாயிடம் "நண்பா. உன் கழுத்தில் பட்டையாக ஒரு வடு இருக்கிறதே. அது எப்படி ஏற்பட்டது?" என்று கேட்டது.

அதற்கு நாய், அலட்சியமாக "ஓ! அதுவா! என் கழுத்தை அலங்காரம் செய்ய கட்டிய பட்டை அது" என்றது.

ஓநாய் திரும்பி நின்று "நண்பா. போதும் உன் சுகவாழ்வு. நான் உன்னுடன் வரமாட்டேன். ஒரு துண்டு ரொட்டிக்காக என் சுதந்திரத்தை இழக்கமாட்டேன்" என்று கூறி காட்டை நோக்கி ஓடிற்று.

**[ஒரு வாய்ச் சோற்றிற்குத் தன் உரிமையை விற்பது, கண்களை விற்றுச் சித்திரம் வாங்கியது போலாகும்.]**

## 52, வருமுன் காப்பது கடன்.

ஒரு சமயம் மழை விடாமல் பல நாட்கள் பெய்துகொண்டிருந்தது. அதனுல் ஒரு குடியானவனுக்குச் சாப்பாட்டிற்கே உணவுப் பொருள்கள் இல்லாமல் போய்விட்டன. அவனிடம் உழவு மாடுகளும், செம்மறி ஆடு, வெள்

ளாடு, நாய் ஆகியவைகளும் ஏராளமாக இருந்தன. உணவுப் பொருள்கள் இல்லாததால் அவன் முதலில் செம்மறி ஆடுகளையும், பிறகு வெள்ளாடுகளையும் கொன்று தன் குடும்பத்தினருக்கு உணவாக அளித்தான். அப்படியும் மழை விடவில்லை. பிறகு உழவு மாடுகளையே வெட்டி உணவாக உண்ணத் தொடங்கினான். அச்சமயம் நாய்கள் ஒன்று கூடின. "இனி நாம் இங்கு தங்கக் கூடாது. நம் எஜமானன் அவனுடைய அன்றாட வேலைக்கு உபயோகமாக இருப்பவைகளையே கொன்று தின்னத் தொடங்கிவிட்டான். அவை முடிந்த பிறகு நம்மை அவன் விட்டுவைப்பான் என்று நம்புவதிற்கில்லை. அதனால் நாம் இப்போதே தப்பிச் சென்றுவிடலாம்" என்று தீர்மானித்து ஓடிவிட்டன.

[**ஆபத்து வருமுன் காத்துக்கொள்வது புத்திசாலித்தனம்.**]

## 53. கழுகும், குள்ளநரியும்.

ஒரு கழுகும், ஒரு குள்ளநரியும் சிநேகமாக இருந்துவந்தன. கழுகு மரத்தின்மீதும், நரி மரத்தின் அடிப் பொந்திலும் வசித்தன. ஒரு நாள் குள்ளநரி தன் குட்டிகளை விட்டு இரை தேடச் சென்றது. அப்போது கழுகு, கீழே

வந்து நரியின் குட்டிகளைத் தூக்கிச் சென்று அதுவும் குஞ்சுகளுமாகத் தின்றுவிட்டன. இரை தேடப்போன குள்ளநரி திரும்பிவந்து கழுகின் துரோகத்தை அறிந்தது. அது எந்தவகையிலும் கழுகிடம் வஞ்சம் தீர்த்துக்கொள்ளத் தீர்மானித்தது. ஆனால் கழுகு தன் குஞ்சுகளுடன் மரத்தின்மீது இருந்ததால் அதை ஒன்றும் செய்ய முடியவில்லை,



சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் கழுகு தேவதைக்கு இடப்பட்ட பலியைத் திருடிக்கொண்டு தன் கூட்டிற்கு வந்தது. பலியிடப்பட்ட மாமிசத் துண்டோடு ஒரு எரிந்துகொண்டிருந்த சுள்ளியும் இருந்ததைக் கழுகு பார்க்கவில்லை. அதனால் எரிந்துகொண்டிருந்த சுள்ளியைக் கூண்டில் வைத்ததும் தீப்பிடித்தது. சிறிது நேரத்திலேயே மரம் பற்றி எரியத் தொடங்கிற்று. இதைக் கீழே இருந்து குள்ளநரி பார்த்துக்கொண்டிருந்தது. தீயில் வெந்து கழுகின் குழந்தைகள் கீழே விழுந்தன. அவற்

றைத் தாய்க் கழுகின் முன்னிலையிலேயே குள்ள நரி மகிழ்ச்சியோடு தின்னத் தொடங்கிற்று.

**[பிறருக்கு நாம் தீமை செய்யும்போது ஏற்படும் மகிழ்ச்சி, நமக்கு அவர்கள் தீங்கிழைக்கும் போது வருத்தமாக மாறும்.]**

## 54. தீயவன் நட்பு.

ஒரு கொக்கானது வாத்துக்கள், நாரைகள் முதலியவற்றைப் பிடிக்க வைத்திருந்த கண்ணியில் அகப்பட்டுக்கொண்டது. மற்றப் பறவைகளோடு அதையும் பிடித்துக் கூடையில் அடைக்கவந்த குடியானவனிடம் கெஞ்சிற்று.



"நான் கள்ளங் கபடம் இல்லாதவன். தெய்வ பக்தி உள்ளவன். மனிதர்களிடத்தில் அன்பு கொண்டவன். என் தாய் தந்தையருக்குச் சேவை செய்பவன். கொடிய விஷப்பூச்சிகளைத் தின்று மற்றவர்களுக்கு உதவி செய்பவன்.

என்னை விட்டுவிடுங்கள்" என்று கேட்டுக் கொண்டது. அதற்குக் குடியானவன் "நீ சொல்வது அனைத்தும் எனக்குத் தெரியும். அது உண்மையாகவும் இருக்கலாம். ஆனால் நீ தீயவர்களுடன் நட்பாக இருந்ததால் அவர்களைப் போல் நீயும் தண்டனை அடைய வேண்டியது தான்" என்று சொல்லிக் கூடையில் போட்டு அடைத்துவிட்டான்.

**[சேரிடம் அறிந்து சேரவேண்டும். இல்லாவிட்டால் பல துன்பங்களுக்கு உள்ளாக நேரிடும்.]**

## 55. விளையாட்டு வினையாய் முடிந்தது.

ஒரு ஆடுமேய்க்கும் சிறுவன் அக்கம்பக்கத்து ஊர்க்காரர்களை ஏமாற்ற எண்ணினான். அதற்காக ஆடுகளை மேய்க்கவந்த சமயம் "ஐயோ ஓநாய் வந்துவிட்டது" "ஓநாய் வந்து விட்டது" என்று பலமாகக் கத்தினான். இதைக் கேட்ட மக்கள் தங்கள் வேலைகளை விட்டுவிட்டுக் கையில் தடியுடன் ஓடிவந்தார்கள். ஆனால் அவர்கள் வந்தபோது ஓநாய் காணப்படவில்லை. பையனோ அவர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான். அவர்களை ஏமாற்றியதற்காகப் பெருமை அடித்துக்கொண்டான். இவ்விதமே அவன் இரண்டு மூன்று முறை செய்தான்.

கடைசியில் ஒருநாள் உண்மையாகவே ஒரு ஓநாய் வந்து, ஆட்டு மந்தையில் புகுந்து, அவற்றைத் தின்னத் தொடங்கிற்று. அப்போது



பையன் எவ்வளவோ அழுது புலம்பிக் கூப்பிட்டும் ஒருவரும் உதவிக்கு வரவில்லை. பையன் எல்லோரையும் ஏமாற்றி எள்ளனம் செய்யவே அவ்விதம் கத்துகிறான் என்று எண்ணிச் சும்மா இருந்துவிட்டனர். அப்போதுதான் அவனுக்கு மற்றவர்களை ஏமாற்றுவது தவறு என்று தெரிய வந்தது.

[**பொய் பேசுபவன் மெய் பேசினாலும் அவனை நம்பமாட்டார்கள்.**]

## 56. வீண் ஆசை

ஒரு கழுகு வானத்திலிருந்து கீழே வேகமாக இறங்கிற்று. அது ஆட்டு மந்தையில் புகுந்து ஒரு குட்டியைக் கால்களில் தூக்கிக் கொண்டு மேலே பறந்து சென்றது. இதை ஒரு கருங்குவி பார்த்தது. அதற்கும் கழுகைப்போல் ஆட்டுக்குட்டியைத் தூக்கிச் செல்ல ஆசை ஏற்

பட்டது. அதுவும் கீழே பறந்துவந்து ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் செல்ல அதன்மீது போய் உட்கார்ந்தது. குட்டியின் ரோமங்களைப் பற்றிக்கொண்டு மேலே கிளம்ப முயற்சித்தது. குட்டியை அதனால் தூக்கமுடியவில்லை. அத்துடன் அதன் கால்களும் ரோமத்



கொண்டது. அது தன் கால்களை விடுவித்துக் கொள்வதற்குள் ஆடு மேய்ப்பவன் வந்துவிட்டான். அதைப் பிடித்து சிறகை ஒடித்து தன் குழந்தைகளிடம் விளையாடக் கொடுத்தான். குழந்தைகள் அதைப் பார்த்து தகப்பனிடம் "அப்பா இது என்ன பறவை?" என்று கேட்டன. அதற்கு ஆடு மேய்ப்பவன் "சிறிது நேரத்திற்கு முன்பு இது தன்னைக் கழுகு என்று நினைத்துக் கொண்டது. இப்போதோ அது தான் ஒரு கருங்குருவிதான் என்பதை நன்றாக உணர்ந்துவிட்டது" என்றான்.

**[தன் வலிமை உணராதவன் தன்னுடைய அழிவிற்கே காரணமாகி விடுவான்.]**

## 57. வைக்கோல் போர் நாய்

ஒரு பொருமை பிடித்த நாய் வைக்கோல் போர்மீது படுத்துக்கொண்டிருந்தது. அப்போது ஒரு எருது பசியோடு வைக்கோலைத் தின்ன வந்தது. நாயோ அதைத் தின்ன விடாமல் குரைத்து "இந்த வைக்கோலை தின்ன யாருக்கும் இடம்கொடுக்கமாட்டேன்." என்றது. அதற்கு எருது "நீ



நாய் என்பதை நன்றாகக் காட்டிவிட்டாய். உன்னாலும் வைக்கோலைத் தின்னமுடியாது; தின்பவர்களையும் அதைத் தின்ன விடமாட்டாய்." என்று வாயில் வந்தபடி பேசிற்று.

***[பொருமைக்காரன் தானும் நன்மை அடைய மாட்டான். பிறர் நன்மை அடைவதையும் காண விரும்பான்.]***

## 58. ஆட்டின் கேள்வி

ஒரு காக்கை ஒரு ஆட்டின் முதுகில் உட்கார்ந்து கத்தத் தொடங்கிற்று. அப்போது

காக்கையைப் பார்த்து ஆடு "நீ இவ்விதம் நாயிடம் செய்வாயா?" என்று கேட்டது.

அதற்குத் காக்கை "யாரிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது எனக்குத் தெரியும். என்னைவிட வலியவர்களாக இருப்பவரிடம் நான் அடங்கியிருப்பேன். உன்னைப் போல் முட்டாளாக இருப்பவர்களை தொந்தரவு செய்வேன்." என்றது.

**[வலியவர்களிடம் பயந்தும், எளியவர்களிடம் கொடுமையாகவும் நடப்பது கேவலமான குண முள்ளவர்கள் செயலாகும்.]**

## 59. தேவதையின் சாபம்

ஒரு சமயம் எல்லாப் பிராணிகளுக்கும் தங்கள் நிலையில் வெறுப்பு ஏற்பட்டது. அவை அனைத்தும் ஒன்றாகச் சேர்ந்து தேவதையை வேண்டிக்கொண்டன. மாடு, மான் போல தனக்குக் கொம்பு வேண்டும் என்று, ஒட்டகம் கேட்டது. முயல் வேகமாக ஓடுவது போல தானும் ஓடவேண்டுமென நரி கேட்டது. முயலோ நரியின் தந்திரம் தனக்கு ஏற்பட வேண்டும் என்றது. குயிலைப் போல் தனக்கு இனிமையான குரலைக் கொடுக்கும்படி மயில் கேட்டது. தேவதை அவைகள் ஒவ்வொன்றிற்

கும் உருவங்கள் அளிக்கப்பட்ட காரணத்தை எடுத்துச் சொல்லிற்று. கொடுக்கப்பட்டதைக் கொண்டே திருப்தியடையும்படி புத்திமதி கூறிற்று. ஆனால் எல்லாம் திருப்



தியடைந்தாலும் ஒட்டகம் மாத்திரம் வெறுப்புடன் இருந்தது. அதனால் கோபமடைந்த தேவதை அதற்குக் காதுகளே வெளியில் தெரியாமல் போகும்படி சாபம் கொடுத்தது.

*[திருப்தியில்லாத மனம் தீமையை வரவழைத்துக் கொள்ளும்.]*

## 60. பேராசை பெருநஷ்டம்

ஒரு குத்தகைக்காரன் தோட்டத்தில் மாமரம் ஒன்றை நட்டு வளர்த்து வந்தான். அந்த மரம் நன்ருக வளர்ந்து இனிமையான கனிகளைக் கொடுத்து வந்தது. அவன் தன் தாராள மனதினுல் அந்தக் கனிகளில் சிலவற்றை தன் எஜமானருக்குக் கொண்டு கொடுத்தான் கனி

களைக் கொடுக்கும் மரத்தைத் தன் நிலத்தில் கொண்டு வைக்கும்படி குத்தகைக்காரனை வற்புறுத்தினன். மரத்தைப் பெயர்த்து அவன் நிலத்தில் நட்டதும் அது கனிகள் கொடுக்காமல் போனதுடன் மரமும் பட்டுப்போய் விட்டது. பேராசை பெரும் நஷ்டமாக முடிந்தது.



**[வீண் ஆசைப்படுது துன்பத்தையே விளைவிக்கும்.]**

## 61. தாடியும் அறிவும்

ஒரு குள்ளநரியும் ஒரு வெள்ளாடும் அதிக தாகத்துடன் காட்டில் சுற்றி அலைந்தன. அவை ஒரு பள்ளத்தில் நீர் இருப்பதைக் கண்டன. தாகம் அதிகமாக இருந்ததால் இரண்டும் பள்ளத்தில் குதித்துவிட்டன. தாகம் தீர்ந்த பிறகு எப்படி வெளியே வருவது என்று இரண்டும் யோசித்தன. அப்போது குள்ளநரி "நீ உன் முன் கால்களைத் தூக்கி நில். நான் முதலில் உன் முதுகில் ஏறி மேலே போய்விடுகிறேன். பிறகு

நீ வெளியே வர உதவி செய்கிறேன்" என்றது. வெள்ளாடும் அதை நம்பி முன்னங்கால்களைத் தூக்கிக்கொண்டு நின்றது. குள்ளநரி அதன் முதுகில் ஏறி மேலே தாவி சென்றது. ஆனால் அது வெள்ளாடு வெளியே வர உதவி செய்ய வில்லை. அதை வெள்ளாடு கேட்டதற்கு



'அதை முன்னதாகவே யோசித்திருக்க வேண்டும். உன் முகத்தில் உள்ள தாடியில் பாதி அளவு அறிவு இருந்தால் நீ மேலே வருவாய்" என்று கூறி குள்ளநரி அங்கிருந்து ஓடிவிட்டது.

**[ஒன்றைச் செய்யப் புகுமுன் நன்ருக யோசிக்க வேண்டும். இல்லாவிட்டால் பல துன்பங்களுக்கு உள்ளாக நேரிடும்.]**

## 62. இயற்கைக் குணம்.

"பறவைகளை வளர்க்க விருப்பமுள்ள ஒருவன் ஒரு கௌதாரியை வாங்கி வந்தான். அதைச் சண்டைச் சேவல்களுடன் விட்டுவைத்

தான். சேவல்களோ கௌதாரியைத் தங்க ளுடன் சேரவிடாமல் துரத்தி அடித்தன. இதைக் கண்ட கௌதாரி மற்றப் பறவைகள் தன்னை வெறுப்பதாக எண்ணியது. ஆனால்



சிறிது நேரத்திற்கெல்லாம் சேவல்கள் ஒன்றுக்கொன்று சண்டை போட்டுக்கொள்வதைப் பார்த்ததும், "இது அவற்றின் இயற்கையான குணம்; ஆதலால் என்னைத் துரத்தி அடித்ததில் ஆச்சரியமில்லை" என்று எண்ணிற்று.

**[தங்களுக்குள் ஒற்றுமை இல்லாதவர்கள் பிறருடன் நட்பாக இருக்க முடியாது.]**

## 63. வீண் பெருமைக்காரன்.

ஒருவன் பல நாடுகளுக்குச் சென்று தன் ஊருக்குத் திரும்பிவந்தான். தன் அக்கம் பக்கத்து வீட்டாரிடம் அவன் வெளி நாடுகளில் செய்த தீரச் செயல்களைச் சொல்லத் தொடங்கினான். "நான் ஒரு தேசத்தில் ஐம்பதடி அகல

பள்ளத்தை ஒரு தாண்டாகத் தாண்டினேன். இதைப் பல ஆயிரம் பேர்கள் பார்த்திருக்கிறார்கள். வேண்டுமானால் இதற்கு எத்தனையோ சாட்சிகளைக்கொண்டு நிரூபிக்க முடியும்'' என்றான். அப்போது அங்கு இருந்தவர்களில் ஒருவன் "இதற்குச் சாட்சியம் தேவை இல்லை. இந்த ஊரிலேயும் ஐம்பதடி பள்ளத்தைத் தாண்டுங்கள்; நேரிலேயே பார்க்கலாம்'' என்றான். உடனே தற்பெருமைக்காரனின் முகம் விழுந்துவிட்டது.

**[உண்மையைச் செயலில் காட்டினால் அதற்குச் சாட்சி தேவை இல்லை.]**

## 64. தேவதையின் கோபம்.

தேவதைகளைப்பற்றி ஏளனமாகப் பேசி, நிந்தனை செய்யும் ஒருவன், ஒரு தேவதையைச் சோதனை செய்யத் தீர்மானித்தான். அவன் ஒரு குருவியைப் பிடித்து பையில் போட்டுக்கொண்டான். பிறகு தேவதையின் இருப்பிடமான அதன் கோவிலுக்குச் சென்றான். தேவதையின் முன் சென்று பையில் உள்ள குருவி உயிருடன் இருக்கிறதா, செத்துவிட்டதா என்று கேட்டான். தேவதை உயிரோடு இருக்கிறது என்று சொன்னால் அதை நசுக்கிக் கொன்றுவிடலாம்.

செத்தது என்றால் அப்படியே வெளியே விடலாம் என்று அவன் எண்ணியிருந்தான். தேவதை அவன் மனதில் இருப்பதை அறிந்தது. அது அவனைப் பார்த்து "குருவி உயிருடன் இருப்பதும், இறந்துபோவதும் உன் கையில் தான் இருக்கிறது. ஆனால் உனக்கு உன் உயிரை வைத்திருக்கவோ, விட்டுவிடவோ அதிகாரம் இல்லை" என்று கூறி மற்றவர்களுக்குப் பாடமாக இருக்கட்டும் என்று எண்ணி அவனைக் கொன்றுவிட்டது.

**[அறிவுக்கு மீறிய செயலில் இறங்குவது அழிவைத் தரும்.]**

## 65. கிழவியும் பெட்டைக் கோழியும்.

ஒரு கிழவியிடம் ஒரு பெட்டைக் கோழி இருந்தது. அந்தக் கோழி தினமும் ஒரு முட்டை இட்டுவந்தது. கிழவிக்கு ஒரு யோசனை தோன்றிற்று. கோழிக்கு அதிகத் தீனி போட்டால் தினமும் இரண்டு முட்டை இடலாம் என்று எண்ணினாள். அதன்படியே அவள் கோழிக்கு அளவுக்கு அதிகமாகத் தீனிபோட்டு வந்தாள். அதிக தீனி தின்றதால் கோழி கொழுத்து முட்டை இடுவதையே நிறுத்திவிட்டது.

**[பேராசை பெரு நஷ்டத்தை விளைவிக்கும்.]**

## 66. இரண்டு மீன்கள்.

சுறு மீனை திமிங்கலம் ஒன்று துரத்திக் கொண்டு வந்தது. சுறு தப்புவதற்காக கரைக்கே வந்து சேர்ந்துவிட்டது. அதைப் பிடிக்கும் நோக்கத்தில் திமிங்கலமும் கரையை வந்தடைந்தது. ஆனால் இரண்டினாலும் திரும்பவும் தண்ணீருக்குள் போக முடியவில்லை. அதனால் இரண்டும் உயிர் போகும் தருவாயில் இருந்தன. அப்போது திமிங்கலம் பெருமூச்சு விடுவதைக் கண்டு சுறுமீன் "என்னோடு என் விரோதியும் இறப்பதால் எனக்கு மரணமும் மகிழ்ச்சியையே அளிக்கிறது" என்று சொல்லிற்று.

[முட்டாள்களுக்குத் தங்கள் மரணத்தை விட எதிரியின் நஷ்டமே மகிழ்ச்சியை அளிக்கும்.]

## 67. பூமியைப் பார்த்து நட.

ஒரு ஜோதிடன் இரவு நேரத்தில் வானத்திலுள்ள நட்சத்திரங்களை ஆராய்ந்துகொண்டே வழி நடந்தான். வழியில் ஒரு குட்டை இருந்தது. அவன் வானத்தைப் பார்த்துக்கொண்டே நடந்ததால் குட்டையில் விழுந்துவிட்டான். அதிலிருந்து வெளியே வர முடியாமல் அவன்

தத்தளித்துக் கொண்டிருந்தான். அந்த வழி யாக வந்த ஒரு வழிப்போக்கன் அவனைத் தூக்கி விட்டு "ஏ முட்டாள் ஜோதிடனே! வானத்து நட்சத்திரங்களை ஆராய்ந்து அறிவதை விட்டு, வழியைப் பார்த்து நடக்கத் தெரிந்துகொள்" என்று கூறிச் சென்றான்.

[**அறிவிற்கு அப்பாற்பட்டதை ஆராய முயல்வது அழிவைத் தரும்.**]

## 68. லாபத்தில் பங்கு.

ஒரு வியாபாரி ஒரு ஊருக்குப் போய்க் கொண்டிருந்தான். அவன் புறப்படுமுன் வழியில் கிடைப்பதில் பாதியை ஒரு தேவதைக்குக் கொடுப்பதாக வேண்டிக்கொண்டான். அவனுக்கு வழியில் ஒரு மூட்டை கிடைத்தது. அந்த மூட்டையில் பேரீச்சம் பழங்களும், வாதம் கொட்டையும் இருந்தன. அவன் பேரீச்சம் பழங்களைத் தின்று கொட்டைகளையும், வாதம் பருப்பைத் தின்று அதன் மேல் ஓட்டையும் கொண்டுவந்து தேவதையின் முன் வைத்தான். "நான் சொன்ன விதம் தங்களுக்குப் பாதி கொடுத்துவிட்டேன்" என்றான். வியாபாரிகள் கடவுளிடம்கூட தந்திரத்தைக் காட்டுவார்கள்.

[**ஏமாற்று வித்தையில் கை தேர்ந்தவர்கள் கடவுளிடத்திலும் அஞ்சமாட்டார்கள்.**]

# 69. தாயால் கெட்ட மகன்.

ஒரு பையன் பள்ளியில் படிக்கும்போது தன் தோழர்களிடமிருந்து ஒரு புத்தகத்தைத் திருடினன். அதைத் தன் தாயாரிடம் கொண்டுவந்து கொடுத்தான். தாயாரோ அவன் செய்த திருட்டைக் கண்டிக்கவில்லை. அதற்கு மாருக அவனை உற்சாகப்படுத்தினுள். பையன் அதனுல் பல குற்றங்களைச் செய்யத் தொடங்கினன். கடைசியில் ஒரு திருட்டில் ஒரு கொலையும் செய்துவிட்டான். அதன் பயனுக அவன் கைது செய்யப்பட்டு தூக்கு தண்டனையும் அடைந்தான் அவனுடைய தண்டனையை நிறைவேற்ற காவல்காரர்கள் தூக்குமேடைக்கு அழைத்து வந்தார்கள். தூக்குமேடையைச் சுற்றி ஆயிரக்கணக்கானவர்கள் வேடிக்கை பார்க்க நின்றிருந்தார்கள். அவர்களோடு அவனுடைய தாயாரும் அழுதுகொண்டே நின்றிருந்தாள். அவளைக் கண்டதும் பையன் காவல்காரர்களிடம் தன் தாயாரிடம் ஒன்றைக் கூற வேண்டும் என்ருன். அவர்களும் அவன் தாயாரை அழைத்தார்கள். பையன் தாயின் காதில் ஏதோ சொல்வதுபோல் அவளுடைய காதைத் துண்டாகக் கடித்துவிட்டான். இதைக் கண்டு கூடியிருந்தவர்கள் அவனை முன்னிலும்

அதிகமாக நிந்தித்தார்கள். அப்போது பையன் "பொது மக்களே! நான் சொல்வதைச் சற்று கேளுங்கள். நான் இந்த நிலைக்கு வந்ததற்கு என் தாயே காரணம். சிறு பையனாக இருந்த போது நான் முதலில் திருடியதற்கு இவள் உற்சாகம் காட்டாமல் என்னைத் தண்டித்திருந்தால் நான் தூக்குமேடை ஏறவேண்டியிருக்காது. நானும் உங்களைப்போல் நல்லவனாகவே இருந்திருப்பேன்" என்றான்.

**[ஆரம்பத்திலேயே குற்றத்தைக் கண்டிக்க வேண்டும். தவறினால் முடிவு வருந்தக்கூடியதாக இருக்கும்.]**

## 70. அத்திக்கனி வியாபாரி

ஆடு மேய்ப்பவன் ஒரு நாள் கடற்கரை ஓரமாக ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான். அப்போது அவனுடைய மனதைக் கடலும், கப்பலும் கவர்ந்தன. உடனே அவனுக்கு ஆடு மேய்க்கும் வேலையில் வெறுப்பு உண்டாயிற்று. கப்பல் ஏறிக் கடலைக் கடந்துசென்று வியாபாரம் செய்யத் தீர்மானித்தான். அதன்படியே தன் ஆடுகளையெல்லாம் விற்றுப் பணமாக்கினான். அந்தப் பணத்தைக்கொண்டு அத்திப் பழங்கள் வாங்கினான். ஒரு கப்பலில் அவற்றை

ஏற்றிக்கொண்டு வியாபாரம் செய்யப் புறப்பட்டான். அவனுடைய கெட்ட காலம் திடீரென்று புயலும் மழையும் தோன்றிற்று. கப்பலைக் காப்பாற்ற கப்பல்காரர்கள் அதிலிருந்த சாமான்களையெல்லாம் கடலில் தூக்கிப் போட்டார்கள். அதனால் அவனுக்குப் பெரு நஷ்டம் ஏற்பட்டு ஆடு மேய்ப்பவனாக மீண்டும் தன் பழைய வேலைக்கே வந்து சேர்ந்தான்.

சில நாட்களுக்குப் பிறகு ஒருநாள் அவன் அதே கடற்கரைக்கு ஆடுகளை மேய்க்க ஓட்டி வந்தான். அப்போதும் அவனைக் கடல் மயக்கிற்று. அவன் உடனே கடலை நோக்கி "உன் பசிக்கு இன்னமும் அத்திப்பழங்கள் தேவையா? இனிமேல என்னால் உனக்குத் தினி தர முடியாது" என்று தன் ஆடுகளை ஓட்டிச் சென்றான்.

**[திருப்தியில்லாதவன் வாழ்க்கை துன்பம் நிறைந்ததாக் மாறிவிடும்]**

## 71. தந்தையின் கனவு

ஒரு பணக்காரனுக்கு ஒரு மகன் இருந்தான். மகன் வேட்டையில் மிகவும் கெட்டிக்காரன். ஒருநாள் தகப்பன் ஒரு கனவு கண்டான். கனவில் மகன் வேட்டைக்குப் போய் அங்கு

ஒரு சிங்கத்தினுல் கொல்லப்படுகிருன். இந்தக் கனவைக் கண்டதும் பணக்காரன் பயந்துவிட்டான். அவன் உடனே மகனுக்காகப் பெரிய மாளிகையைக் கட்டினுன். அதில் எல்லா வசதிகளையும் செய்தான். அதிலேயே தன் ஒரே மகனை கொண்டு வைத்துப் பாதுகாத்தான். பையனுக்கோ எல்லா வசதிகள் இருந்தும், தான் கைதிபோல் இருப்பதாகவும், தன்னைத் தகப்பனே காவல்காத்து வருவதாகவும் எண்ணினுன். அவன் வருத்தத்துடன் மாளிகையைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்தான். அச்சமயம் அவனுக்கு அங்குள்ள சுவரில் வரைந்துள்ள சிங்கம் தென்பட்டது. அதைக் கண்டதும் அவன் ஆத்திரமாக "உன்னைக் கனவில் கண்டதால் அல்லவா தகப்பனுர் என்னைக் கைதியாக வைத்திருக்கிருர்" என்று கையில் ஓங்கி அறைந்தான். அவன் கை சுவரில் இருந்த ஆணியில் பலமாகத் தாக்குண்டு ரத்தம் பெருகத் தொடங்கிற்று. அந்தக் காயம் சில நாட்களில் பெரியதாகி அவன் உயிரையே குடித்துவிட்டது. தகப்பன் எவ்வளவு எச்சரிக்கையுடன் இருந்தும் மகன் சிங்கத்தினுல் கொல்லப்பட வேண்டிய விதியைத் தடுக்க முடியவில்லை.

**[மூட நம்பிக்கையுடையவன் அதனுலேயே அழிவான்.]**

# 72. வால் இழந்த நரி

ஒரு நரி கண்ணியில் அகப்பட்டுக்கொண்டது. அது தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வாலை இழக்க வேண்டியதாயிற்று. ஆனால் பிறகு அதற்கு வால் இல்லாமல் வெளியில் வர வெட்கமாக இருந்தது. அது மிகவும் சிந்தித்தது. கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தது. தன் இனத்தைச் சேர்ந்தவர்களை ஒன்று கூட்டிற்று. வால் இருப்பதால் உள்ள துன்பங்களை எடுத்துச் சொல்லி எல்லோரும் வாலை வெட்டிவிட வேண்டும் என்று கேட்டுக்கொண்டது. அப்போது ஒரு கிழ நரி எழுந்து "இப்போது நீ சொன்னது வால் உள்ள நரிகளுக்காகவா? அல்லது வாலை இழந்த நரிகளின் அவமானத்தையும், அவர்கள் இழந்ததையும் மறைப்பதற்காகவா? சொல்லு!" என்று கேட்டது.

வால் இழந்த நரி இதைக் கேட்டு வெட்கமுற்று ஓடிவிட்டது.

**[கெட்டவர்கள் பிறரையும் கெடுக்க முயற்சிப்பார்கள். அவர்களிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.]**

## 73. நரியும், முள் செடியும்.

ஒரு நரி வேட்டை நாய்களுக்குப் பயந்து ஓடிவந்தது. அது மறைந்துகொள்ள ஒரு முட் புதருக்கு ஓடிற்று. புதரும் அதற்கு வழிவிட்டது. ஆனால் அது கீழே விழாமலிருக்க ஒரு முட் செடியைப் பிடிக்கவே அதன் கால்களில் முள் பொத்துக்கொண்டது. நரி கீழே உட்கார்ந்து காலை நக்கியவண்ணம் முள் செடியைக் கேவல மாகப் பேசிற்று. அச்சமயம் முள்செடி "நரியே! ஏன் இவ்விதம் கோபப்படுகிறாய். கெட்ட வழி களிலேயே நீ மனதைச் செலுத்திக்கொண் டிருப்பவன். என் அருகில் வரும் ஒவ்வொன்றை யும் நான் இழுத்துக்கொள்வேன் என்பது உனக்கு நன்றாகத் தெரியும். அப்படியிருக்க நீ என்னை உதவிக்குப் பிடித்துக்கொள்ளாமல் இருக்க வேண்டுமல்லவா?" என்று கேட்டது.

**[சொல்லும் செயலும் ஒன்றாக இல்லாவிட் டால் பிறர் பழிக்க நேரிடும்.]**

## 74. நாவைப்போல் விரல் இல்லை.

ஒரு நரி வேட்டைக்காரர்களுக்குப் பயந்து ஓடி வந்தது. வழியில் ஒரு குடியானவன் இருந் தான். அவனிடம் மறைந்துகொள்ளச் சிறிது

இடம் கேட்டது. அவனும் குடிசையினுள் போய் இருக்கும்படி சொன்னான். நரியும் குடிசையினுள் போய் மறைந்துகொண்டது. சிறிது நேரத்தில் வேட்டைக்காரர்கள் அங்கு வந்தார்கள். அவர்கள் குடியானவனிடம் நரியைப்பற்றிக் கேட்டார்கள். அதற்குக் குடியானவன் நரியைப் பார்க்கவில்லை என்று வாயால் சொல்லி, விரலால் குடிசையைச் சுட்டிக் காட்டினான். வேட்டைக்காரர்களோ அவன் காட்டிய அடையாளத்தைக் கவனிக்கவில்லை. ஆனால் நரி கதவின் ஓட்டையின்மூலம் பார்த்துவிட்டது. வேட்டைக்காரர்கள் போனதும் அது மெள்ள வெளியேவந்து தன் வழியே போகத் தொடங்கிற்று. அச்சமயம் குடியானவன் "ஏ நன்றி கெட்ட நரியே! நீ மறைந்துகொள்ள இடம் கொடுத்த என்னிடம் சொல்லாமல்கூடப் போகிறாயே?" என்றான்.

நரி பதட்டமில்லாமல் "நீங்கள் கேட்டது முறைதான். ஆனால் உங்கள் நாவைப்போல் விரலையும் நேர்மையுடன் வைத்திருந்தால் நன்றி சொல்லியிருப்பேன்" என்றது.

**[துன்பத்தில் சிக்கியவன் தன் விரோதியின் உதவியைநாடினால், அவன் மேலும் துன்பத்தையே அனுபவிக்க நேரிடும்.]**

## 75. தொழுவதைவிட அடிப்பதேமேல்.

ஒருவன் ஒரு தெய்வத்தை வைத்து பூஜித்து வந்தான். அதனிடம் அவன் தினமும் தனக்கு சுகமாக வாழ உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டு வந்தான். ஆனால் நாளுக்குநாள் அவனுக்கு அதிக துன்பமே வந்தது. அதனால் அவன் கோபமடைந்து ஒரு பெரிய இரும்பினால் சிலையின் தலையில் பலமாக அடித்தான். தெய்வச் சிலையின் தலை உடைந்து அதிலிருந்து பொன்னும் மணியும் கொட்டிற்று. இதைக் கண்ட அவன் "இந்தப் பிடிவாத குணமுள்ள தெய்வத்தைத் தொழுவதைவிட அடிப்பதே மேல்" என்று எண்ணினான்.

## 76. தந்தையின் சொத்து

ஒரு குடியானவன் நேர்மையுடன் வாழ்ந்து வந்தான். அவன் தன்னைப் போலவே தன் பிள்ளைகளும் நேர்மையாக வாழ வேண்டும் என்று விரும்பினான். அதற்காக அவன் தன் வயதான காலத்தில் பிள்ளைகளை அழைத்தான். "குழந்தைகளே! நான் இனி அதிக நாள் இருக்க மாட்டேன். உயிர் இருக்கும்போதே இதைச் சொல்லிவிடுகிறேன். நான் இறந்த பிறகு நமது திராட்சைத் தோட்டத்தைத் தோண்டிப்

பாருங்கள். அங்கே நான் சேமித்து வைத்த சொத்து கிடைக்கும். எடுத்துக்கொண்டு சுக மாக வாழுங்கள்" என்றான்.

சில நாட்களுக்குப் பிறகு அவன் இறந்து விட்டான். பிள்ளைகள் தகப்பனார் சொத்தை அடையும் பேராசையால் திராட்சைத் தோட் டம் முழுவதையும் நன்றாகத் தோண்டிப் பார்த் தார்கள். அவர்களுக்கு ஒன்றும் கிடைக்க வில்லை. ஆனால் அடுத்த ஆண்டு திராட்சைப் பழம் ஏராளமாகக் காய்த்தது. அதன் மூலம் தகப்பன் குறிப்பாகச் சொன்னதை அவர்கள் உணர்ந்துகொண்டார்கள்.

**[பெரியோர்கள் கூறும் ஒவ்வொன்றிலும் ஒரு பொக்கிஷம் அடங்கியிருக்கும்.]**

## 77. வேலைக்குத் தகுந்த ஆயுதம்.

ஒரு செம்படவன் ஆற்றுக்குச் சென்றான. அவனுக்கு வலையை வீசுவதைவிட குழலை ஊதி னால் மீன்கள் ஏராளமாக கிடைக்கலாம் என்று தோன்றிற்று. அவன் வலையை வைத்துவிட்டுக் குழலை எடுத்து இனிமையாக ஊதினான். மாலை வரை அவன் குழல் ஊதியும் ஒரு மீன்கூட அவ னுக்கு அகப்படவில்லை. அதனால் கோபங் கொண்டு அவன் குழலை வைத்துவிட்டு வலையை

எடுத்து வீசினன். மீன்களோ அவனது வலையில் மந்தை மந்தையாக வந்து வீழ்ந்தன. இதைக்கண்ட செம்படவன் "இது என்ன! எனது இனிமையான குழல் ஒலியைக் கேட்க வராமல், வலையில் மட்டும் வந்து மாட்டிக்கொள் கின்றனவே" என்று கூறி கூடையில் பிடித்துப் போட்டான்.

[தொழிலில் பற்றும் விடாமுயற்சியும் இருந் தால் நல்ல பலனை அடையலாம்.]

## 78. கிழவனும் எமனும்.

அதிக வயதான கிழவன் ஒருவன் பெரிய விறகுச் சுமையைத் தலையில் தூக்கிக்கொண்டு வந்தான். அவனுக்கு அதிகக் களைப்பாக இருக் கவே விறகுச் சுமையைக் கீழே போட்டான். அவன் தன் வாழ்க்கையை வெறுத்து "இவ் விதம் துன்பப்படுவதைவிட என்னை அழைத்துக் கொண்டு போக வா" என்று எமனை அழைந் தான். உடனே எமன் அவன் முன்னல் வந்து நின்று "பெரியவரே என்ன வேண்டும்?" என்று கேட்டான். கிழவன் பயந்து "ஐயா தயவு செய்து விறகுச் சுமையைத் தூக்கி என் தலையில் வையுங்கள்" என்றான்.

[மரணத்தை விட துன்பத்தை அனுபவிக்க நினைப்பது மனிதனின் இயற்கை குணமாகும்.]

# 79. குரங்கு அரசன்.

ஒரு காட்டில் அதன் அரசனுன வயதான சிங்கம் இறந்ததும், யாரை அரசனுகச் செய்வது என்று பெரிய சர்ச்சை உண்டாயிற்று. மிருகங்கள் அனைத்தும் ஒன்றுகூடின தங்களுக்குள் அனைவரையும் யார் மகிழ்விக்கிறுர்களோ அவரே அரசனுக நியமிக்கப்படுவார் என்று முடிவு செய்தன. அரச பதவிக்குப் பலர் போட்டியிட்டனர். ஒரு வாலில்லாக் குரங்கு தன் ஆட்டத்தாலும், வேடிக்கைப் பேச்சாலும் எல்லாமிருகங்களையும் மகிழ்விக்கச் செய்தது. அதனுல் அதையே விலங்குகள் அரனுக நியமித்தன. ஆனுல் குரங்கு அரசனைது நரிக்குப் பிடிக்கவில்லை. அது குரங்கு அரசனிடம் வந்து மிகவும் பணிவாக "நான் ஒரு புதையலைக் கண்டேன். அது அரசனுக்கே சேரவேண்டும். தாங்கள் வந்தால் காண்பிக்கிறேன்" என்றது. புதையல் என்றதும் குரங்கிற்கு ஆசை அதிகரித்தது. அது நரியின் பின்னுல் சென்றது. நரி ஒரு பள்ளத்தில் வைக்கப்பட்டிருந்த பொறியைக் காண்பித்து "இதோ! இதற்குள் இருக்கிறது. புதையல் எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கூறிற்று. குரங்கும் ஆத்திரத்துடன் போய் பொறியில் கை வைத்தது. உடனே அதன்

கைகள் இரண்டும் பொறியில் அகப்பட்டுக் கொண்டன. அது நரியின் வஞ்சகத்தை அறிந்து "ஏ துரோகியே! வஞ்சனையாக என்னைப் பொறியில் மாட்டிவிட்டாயே!" என்று கேட்டது. அதற்கு நரி "ஏ அறிவில்லாத அரசனே! உன்னையே உன்னால் காப்பாற்றிக்கொள்ள முடியாத போது, நீ எப்படி குடிமக்களைப் பாதுகாக்கப் போகிறாய்?" என்று சொல்லிச் சென்றது.

**[தன்னைக் காத்துக்கொள்ளச் சக்தியில்லாதவன் பிறறைக் காப்பது இயலாது.]**

## 80. நரியும் ஓநாயும்.

மிகவும் நோயில் இளைத்துப்போன ஒரு நாய், ஒரு வீட்டின் வாயிலில் படுத்துக்கொண்டிருந்தது. அப்போது அந்த வழியாகவந்த ஒரு ஓநாய் அதைப் பிடித்துத் தின்ன முயன்றது. நாய் அதைத் தடுத்து "நண்பா! இப்போது என்னை விட்டுவிடு. நான் நோயினால் இளைத்துப் போயிருக்கிறேன். இன்னும் சில நாட்களுக்குள் எங்கள் எஜமானன் வீட்டில் ஒரு கலியாணம் நடக்கப் போகிறது. அதில் நான் நன்றாகத் தின்று கொழுத்துவிடுவேன். பிறகு நான் உன்னிடம் வந்து உனக்கு இறையாகிவிடுகிறேன்" என்றது.

ஓநாயும் அதை நம்பி நாயை ஒன்றும செய்யாமல் விட்டுவிட்டது.

சில நாட்களுக்குப் பிறகு ஒருநாள் ஓநாய் அந்த வீட்டின் வழியாக வந்தது. அச்சமயம் நாய் உள்ளே இருந்தது. அதைப் பார்த்து ஓநாய் முந்தி சொன்னதை நினைவுபடுத்திற்று. அதற்கு நாய் "நண்பனே! நான் மீண்டும் தவறுதலாக வீட்டிற்கு வெளியில் வரமாட்டேன். அப்படியே வந்தாலும் உன்னிடம் அகப்பட்டுக்கொள்ள மாட்டேன். என்னைக் காப்பாற்றிக்கொள்ளும் சக்தியும் தெம்பும் இப்போது என் உடம்பில் உள்ளது" என்றது. இதைக்கேட்ட ஓநாய் ஏமாந்துவிட்டோம் என்று எண்ணிப் போய்விட்டது.

[ஆபத்து வந்தபோது அதிலிருந்து தப்ப முயல்வதே அறிவுடைமையாகும்.]

## 81. சிங்கத்தின் ஆசை

ஒரு விறகுவெட்டிக்கு ஒரு அழகான பெண் இருந்தாள். அந்தப் பெண்மீது ஒரு சிங்கம் ஆசைகொண்டது. அவளைக் கலியாணம் செய்யவும் விரும்பியது. அந்தப் பெண்ணின் தகப்பனைக் கண்டு, அவன் மகளை தனக்கு மணம்

செய்து கொடுக்கும்படி கேட்டது. விறகு வெட்டி சிங்கத்தைக் கண்டு பயந்தான். சிங்கத்திற்குத் தன் மகளைக் கலியாணம் செய்து கொடுக்க அவன் விரும்பவில்லை. அதனால் அவன் ஒரு தந்திரம் செய்தான். அவன் சிங்கத்தினிடம் "விலங்குகளின் அரசனே! உனக்கு என் பெண்ணைக் கலியாணம் செய்துகொடுக்க மிகவும் சந்தோஷம்தான்! ஆனால் என் பெண் மிகவும் பயந்தவள். உன் கோரைப் பற்களையும் நகங்களையும் நீக்கிவிட்டால் அவளை மணம் செய்து கொடுக்கிறேன்!" என்றான்.

சிங்கம் மகிழ்ச்சியுடன் "நீயே அவற்றை நீக்கிவிடு" என்றது.

விறகுவெட்டி தாமதம் செய்யாமல் உள்ளே சென்று கோடாலியை எடுத்துவந்தான். சிங்கத்தின் நகங்களை வெட்டினான். பற்களைப் பிடுங்கினான். பிறகு ஒரு நாயைப்போல் அதை அடித்துக் காட்டுக்குத் துரத்தினான்.

[ஆசை அறிவையும் பெருமையையும் அழித்துவிடும்.]

## 82. வெற்றி யாருக்கு?

இரண்டு சண்டைச் சேவல்கள் ஒரு குப்பை மேட்டின் உரிமைக்காகக் கடுமையாகச் சண்டை செய்தன. ஒரு சேவல் தோல்வியடைந்து ஓடிப் பதுங்கிக்கொண்டது. மற்றது பக்கத்திலிருந்த ஒரு மதில் சுவரின்மீது ஏறி வெற்றியடைந்த பெருமையில் பலமாகக் கூவிற்று. அச்சமயம் வானத்தில் ஒரு கழுகு பறந்து கொண்டிருந்தது. அது வெற்றியுடன் கொக்கரிக்கும் சேவலைப் பார்த்துப் பாய்ந்து வந்து அதைத் தூக்கிச் சென்றது. அதைப் பார்த்துக்கொண்டிருந்த தோல்வியடைந்த சேவல் பயமின்றி வெளியே வந்தது. போட்டியில்லாமல் அது குப்பை மேட்டை தன் வசமாக்கிக் கொண்டது.

[**வல்லவனுக்கு வல்லவன் உலகத்தில் உண்டு.**]

## 83. தேவதையும் தேனீயும்

ஒரு சமயம் ஒரு தேனீ தான் சேகரித்து வைத்திருந்த நல்ல தேனை ஒரு தேவதைக்குக் கொண்டுபோய் கொடுத்தது. தேவதை மகிழ்ச்சியடைந்து "உனக்கு என்ன வரம் வேண்டும் கேள் தருகிறேன்" என்றது. தேனீ பேராசையுடன் "என் கொடுக்கால் நான் கொட்டுபவர்கள் உடனே இறந்துவிடவேண்டும். இந்த

வரத்தைக் கொடுத்தால் போதுமானது" என்றது.

உடனே தேவதை கோபமடைந்து "முட்டாள் தேனீயே! உன்தயவில் யாரையும் வைக்கமாட்டேன். நீ மனிதர்களையோ, பிராணிகளையோ கொட்ட நினைத்து உன் கொடுக்கால் தீண்டினால் உன் கொடுக்கையும் இழப்பாய். உன் உயிரும் சிறிது நேரத்தில் போய்விடும்" என்று சாபம் கொடுத்தது.

[ஆசைக்கும் ஒரு அளவு உண்டு.]

## 84. தேனில் மயங்கிய வண்டுகள்

ஒரு பானையில் நிறையத் தேன் இருந்தது. தேனின் வாடையைக் கண்டு வண்டுகள் மயங்கின. அதைப் பருக பானையில் குதித்தன. வயிறு கொண்ட மட்டும் தேனைக் குடித்தன. பிறகு அவை மேலே கிளம்ப முடியவில்லை. அவற்றின் இறக்கைகள் தேனில் சிக்கிக்கொண்டன. வெகு நேரம் அவதிப்பட்டு அவை இறந்து போகும் நிலைக்கு வந்தன. அப்போது அவை வருத்தத்துடன் "நாம் விரும்பியதே நமக்கு மரணத்தை அளிப்பதாகிவிட்டது" என்று சொல்லிக் கொண்டன.

*[கண்கள் மயக்கிய இன்பம் கணத்தில் ஒரு வினை அழித்து விடும்.]*

## 85. இழிவான பறவை

கோடை காலத்தில் மட்டும் வந்து கூவும் தூக்கணாங்குருவி அதற்கு முன்னதாகவே வந்தது. அதைக் கண்ட ஒரு வீண் செலவுக்காரப் பையன் கோடை காலம் வந்ததாக எண்ணினான். கோடை காலத்திற்கு தனக்கு சொக்காய் தேவையில்லை என்று எண்ணித் தன் சொக்காயை விற்றுவிட்டான். ஆனால் அவன் நினைத்தபடி கோடை காலம் வரவில்லை. இதற்குமாறுகக் கடுமையாகப் பனி பெய்யத் தொடங்கிற்று. அதனால் அவனும் அந்த தூக்கணாங்குருவியும் குளிராலும் பசியாலும் வாடி இறக்வேண்டியதாயிற்று. குருவி இறப்பதைக்கண்ட பையன் "ஏ இழிகுணமுள்ள குருவியே! காலத்தை அறியாமல் நீ அழிந்து, என்னையும் அழித்து விட்டாயே" என்று வருத்தமுடன் சொன்னான்.

[முன்யோசனை இல்லாதவர்கள் தங்கள் செயலுக்காகத் தங்களையே நிந்திப்பார்கள்]

## 86. நேர்மையும், பொய்மையும்

ஒரு விறகு வெட்டியின் கோடாலி எதிர்பாராதவிதமாக ஒரு ஏரியில் விழுந்து விட்டது. அதை அவன் எவ்வளவு தேடியும் அகப்பட

வில்லை. அதனால் அவன் வருத்தத்துடன் தேவதையைத் துதித்தான். தேவதை அவன் முன் தோன்றிற்று. அவன் வருந்துவதற்கான காரணத்தைக் கேட்டது. பிறகு ஏரியில் மூழ்கி ஒரு பொன் கோடாலியை எடுத்துக் கொண்டு மேலே வந்து "இது தானா?" என்று கேட்டது. விறகு வெட்டி "அது இல்லை" என்றான். உடனே தேவதை ஏரியில் மூழ்கி ஒரு வெள்ளிக் கோடாலியை எடுத்து வந்து காட்டிற்று. அதுவும் இல்லை என்றதும், அவனுடைய இரும்புக் கோடாலியையே எடுத்து வந்தது. அதைக் கண்டதும் விறகு வெட்டி மகிழ்ச்சியுடன் "இது தான் என்னுடையது" என்று கைகளை நீட்டினான். தேவதை மகிழ்ந்து "அப்பா! நீ நேர்மையானவன். உன் நேர்மைக்காக இந்த மூன்று கோடாலிகளையும் நீயே வைத்துக் கொள்" என்று இரும்புக் கோடாலியுடன் பொன், வெள்ளி ஆகிய கோடாலிகளையும் கொடுத்தது.

இதை அந்த விறகு வெட்டியின் பக்கத்து வீட்டுக்காரன் அறிந்தான். அவனும் ஒரு விறகு வெட்டிதான். அவன் தேவதையிடம் பொன் கோடாலியைப் பெற விரும்பினான். உடனே அவன் தன் இரும்புக் கோடாலியை எடுத்துப் போய் அதே ஏரியில் போட்டுவிட்டு அழுது கொண்டே தேவதையைத் துதித்தான். தேவ

தையும் அவன் முன் வந்து நின்றது. அவன் அழுவதற்கான காரணத்தைக் கேட்டது. தன்னுடைய கோடாலி ஏரியில் விழுந்துவிட்டதாக அவன் கூறினான். தேவதை ஏரியில் மூழ்கி ஒரு பொன் கோடாலியை எடுத்து வந்து காட்டிற்று. அதைக் கண்ட அவன் "இதுதான் என்னுடையது" என்று கையை நீட்டினான்.

தேவதை கோபங் கொண்டு "டேய் மோசக்காரா! பொய் சொன்ன உனக்கு உன் கோடாலியையும் கொடுக்கமாட்டேன்" என்று சொல்லி மறைந்துவிட்டது. அவன் வெறுங்கை யுடன் வீட்டிற்குத் திரும்பினான்.

**[ஒருவன் மனநிலையை அறியக்கூடிய வரை ஏமாற்றுவது இயலாது.]**

## 87. சீ. சீ. இது புளிக்கும்

ஒரு நரி பசியுடன் எங்கும் சுற்றி அலைந்தது. கடைசியில் அது ஒரு திராட்சைப் பழத் தோட்டத்தைக் கண்டது. பசியைத் தணித்துக் கொள்ளலாம்



என்ற எண்ணத்துடன் தோட்டத்தினுள் போயிற்று. திராட்சைப் பழங்கள் உயரத்தில் தொங்கிக் கொண்டிருந்தன. நரி பலமுறை எட்டிப்பார்த்தது கடைசியில் உயரத் தாவிக் குதித்தது. அப்படியும் அதனல் பழத்தைத் தின்ன முடியவில்லை. நரிக்கு களைப்பு அதிக மாயிற்று. அது வெறுப்புடன் "சீ சீ இந்தப் பழங்கள் புளிக்கும்" என்று இழிவாகச் சொல் லிக்கொண்டே தோட்டத்தைவிட்டு வெளியே போயிற்று.

**[விரும்பிய பொருள் கிட்டாத போது அதற் காக வருத்தப்படக் கூடாது.]**

## 88. ஓநாயும் சிங்கமும்

ஒரு ஓநாயும் சிங்கமும் காட்டை விட்டு உலாவப் புறப்பட்டன. சிறிது தூரம் சென்ற தும் சிங்கத்தைப் பார்த்து ஓநாய் "அரசே. உங் களுக்கு ஆடுகளின் கூக்குரல் கேட்கவில்லையா? இதோ போய் உங்களுக்காக ஒரு கொழுத்த ஆட்டைக் கொண்டு வருகிறேன்" என்று கூறிச் சென்றது. அது வந்து பார்த்தபோது ஆடுகள் கூட்டமாக மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றைச் சுற்றி நாய்கள் நின்று காவல் காத்து வந்தன. இதைக் கண்ட ஓநாய் ஒன்றும் செய்ய

முடியாமல் திரும்பி வந்தது. அது சிங்கத்தினிடம்" அரசே நான் இதுவரை இத்தகைய ஆடுகளைப்பார்த்ததே இல்லை. அவை பட்டினியால் மெலிந்து எலும்பும் தோலுமாக இருக்கின்றன. நன்றாய்த் தின்று கொழுக்கும் வரை அவற்றை விட்டு வைப்பதே நல்லது" என்று சொல்லிற்று.

**[ஒரு பொருள் கிடைக்காத சமயம் அதை வெறுப்பதுபோல், பேசுவார்கள்.]**

## 89. வேடனும் கௌதாரியும்

ஒரு வேடனின் கண்ணியில் ஒரு கௌதாரி அகப்பட்டுக்கொண்டது. அது தன்னை விட்டு விடும்படி கெஞ்சிற்று. "நீங்கள் என்னை விட்டால் நான் உங்கள் கண்ணியில் என் நண்பர்கள் பலரைச் சிக்கவைக்கிறேன்" என்றது. அதற்கு வேடன் "நீ தப்புவதற்காக உன் இனத்தவரைக் காட்டிக் கொடுக்க நினைக்கிறாய். உன்னைப் போன்ற துரோகிகள் இருக்கவே கூடாது; நீ சாகவேண்டியது தான்" என்று அதைப் பிடித்துக் கொன்றான்.

**[துரோகத்தைக் கெட்டவர்கள் கூட வெறுக்கிறார்கள்.]**

# 90. ஆமையும் முயலும்

ஒரு முயல் கர்வத்துடன் ஒரு ஆமையைப் பார்த்து "உன்னைப் போன்ற பிராணியை நான் பார்த்ததே இல்லை. உன் முதுகில் மலையை சுமந்து கொண்டிருக்கிறாய். கால்களோ நடக்கவும் வலிமை இல்லாமல் இருக்கின்றன. உன்னால் பத்தடி தூரம் கூட வேகமாக ஓடமுடியாது" என்று கேலி செய்தது.

ஆமை கோபமடையாமல் "நண்பா! நீ கூறுவது உண்மையாக இருக்கலாம். ஆனால் நான் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் ஓடு வேன். உன்னைப்போல் வீண் பேச்சு மாத்திரம் நான் பேசமாட்டேன்" என்றது.

"அப்படியானால் என்னுடன் பந்தயம் வருகிறாயா? நாம் இருவரும் அதோ தெரிகிறதே புளிய மரம். அதைப்போய்த் தொட வேண்டும். யார் முன்னால் போய் அதைத் தொடுகிறார்களோ அவர்களே வெற்றி பெற்றவர்கள்" என்றது. ஆமை அதற்குச் சம்மதித்தது. இரண்டும் ஒரு மைல் தூரத்தில் இருந்த புளிய மரத்தை நோக்கிப் புறப்பட்டன. முயல் வேகமாக முன்னால் ஓடிற்று. ஆமையோ மெள்ள நடந்து வந்தது. வெகு தூரம் வந்ததும்

முயல் திரும்பிப்பார்த்தது. அப்போது ஆமை வெகு தூரத்தில் வந்துகொண்டிருந்தது. முயலுக்கும் ஓடிவந்தது களைப்பாக இருந்தது. அதனால் அது ஆமை அங்கு வருவதற்குள் புளிய மரத்தை அடைந்துவிடலாம் என்று அங்கேயே



படுத்துக்கொண்டது. சிறிது நேரத்திலேயே தூங்கிவிட்டது. அது கண்விழித்து எழுந்த சமயம் ஆமை எங்கும் நிற்காமல் நடந்து புளிய மரத்தை நெங்கியதைக் கண்டது. பிறகு முயல் எவ்வளவு வேகமாக ஓடியும் புளியமரத்தை முதலில் தொடமுடியவில்லை. முயலால் ஆமையை வெற்றிபெற முடியவில்லை.

**[உழைப்பும், முயற்சியும் இல்லாத அதிக திறமையைவிட, விடாமுயற்சியுள்ள குறைந்த திறமையே மேலானது.]**

## 91. தேனீ, கௌதாரி, குடியானவன்

ஒரு வனத்தில் தேனீக்களும், கௌதாரி களும் அதிக தாகத்தாலும் பசியாலும் தவித் தன. அவை ஒரு குடியானவனிடம் சென்றன. எங்களுடைய பசியைப் போக்க உணவும், தாகத்திற்குத் தண்ணீரும் கொடுங்கள். அதற் குப்பதிலாக நாங்கள், உங்கள் திராட்சைத் தோட்டத்தைக் கொத்துகிறோம்" என்று கௌதாரிகள் கூறின. தேனீக்களோ நாங்கள் திருடர்கள் வராமல் பாதுகாக்கிறோம் என்று கூறின. இதைக் கேட்ட குடியானவன் அவை களைப்பார்த்து "நிலத்தை உழ என்னிடம் எருது கள் இருக்கின்றன. தோட்டத்தைக்காக்க நாய் கள் இருக்கின்றன. அதனால் உங்கள் உதவி எனக்கு தேவை இல்லை. நான் உங்களுக்கு ஒன் றும் கொடுக்கமாட்டேன்" என்றான்.

**[அண்டியவர்களுக்கு உதவி செய்வது மற்ற வர்களுக்கு நாம் நமது கடமையைச் செய்தது போல் ஆகாது.]**

## 92. மனிதனும் தேவதையும்

ஒரு மனிதனை பூச்சி ஒன்று ... டது. உடனே அவன் தன் எதிரியான பூச்சி யைக் கொல்ல தேவதையைக் கூவி அழைத்

தான். தேவதை வரவில்லை. பூச்சியோ குதித்து ஓடத்தொடங்கிற்று. இதைக் கண்ட தேவதை "ஏ முட்டாள் மனிதனே! சிறிய காரியங்களுக்கு ஏன் என் உதவியை நாடுகிறாய். உன்னால் முடிந்த சிறிய காரியங்களுக்கே என்னை அழைத்தால் உன்னால் எப்படி பெரிய காரியங்களைச் செய்ய முடியும்?" என்று கேட்டது.

**[சிறிய வேலைகளுக்குப் பிறர் உதவியை நாடு பவன், பெரிய வேலைகளைச் செய்யவே முடியாது.]**

## 93. இரண்டு மனைவிகள்

ஒருவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தார்கள். ஒருத்தி நடுத்தர வயதுடையவள். மற்றவள் யுவதி. அவனுக்குத் தலையில் பாதி நரைத்திருந்தது. நடுத்தர வயதுடைய மூத்த மனைவி அவன் தலையிலிருந்த கருப்பு மயிர்களைப் பிடுங்கினாள். இளையவளான யுவதியோ நரைத்த கூந்தலைப் பிடுங்கினாள். கடைசியில் அவன் தலை மொட்டையாகிவிட்டது.

**[மாறுபட்ட கருத்துடைய இருவரிடம் ஊழியஞ் செய்வது மிகவும் கடினம்.]**

## 94. தண்ணீர் தேடிய தவளைகள்

இரண்டு தவளைகள் தண்ணீருக்காக எங்கும் அலைந்து திரிந்தன. கடைசியாக அவை ஒரு ஆழமான கிணற்றில் சிறிது தண்ணீர் இருப்பதைக் கண்டன. உடனே ஒரு தவளை "ஓ நண்பா! இதில் தண்ணீர் இருக்கிறது. நாம் இதனுள் குதிக்கலாம்" என்றது. அதற்கு மற்றது "நீ சொல்வது நல்லதல்ல. தண்ணீருக்காக நாம் இதனுள் குதித்தால் பிறகு எப்படி மேலே வருவருவது? பிறகு காலமெல்லாம் கிணற்றுத் தவளையாக இருக்க வேண்டியதுதான்" என்றது.

[ஒன்றைச் செய்யப் புகு முன் அதனுல் ஏற்படும் நன்மை தீமையை அறிய வேண்டும்.]

## 95. சேவல், நாய், நரி

ஒரு நாயும் சேவலும் சேர்ந்து மற்ரெரு காட்டிற்கு புறப்பட்டன. வழியில் இருட்டிவிட்டது. அதனுல் ஒரு மரத்தின்மீது சேவலும், அடி மரத்திலிருந்த பொந்தில் நாயும் இரவைக் கழிக்கத் தீர்மானித்தன. நள்ளிரவு நேரத்தில் சேவல் வழக்கப்படி கூவத்தொடங்கிற்று. சேவலின் கூவலைக் கேட்டு ஒரு நரி ஓடி வந்து அங்கு

சேர்ந்தது. அது சேவலைப் பார்த்து "ஆகா. உன் நிறம் போல் நான் பார்த்ததே
உன் குரல் என்ன இனிமையாக
நீ சற்று கீழே இறங்கி வா. உன்னை கட்டித் தழுவவேண்டும் போல் ஆசையாக இருக்கிறது" என்றது.

நரியின் தந்திரத்தை அறிந்த சேவல் "நல்லது நண்பா. கீழே இருக்கும் காவல்காரனிடம் கதவைத்திறக்கச் சொல்லு. நான் வருகிறேன்" என்றது.

மரத்தின் பொந்தில் நாய் இருப்பதை அறியாத நரி பொந்தினுள் சென்றது. உள்ளேயிருந்த நாய் அதைக் கடித்துக் கொன்று விட்டது.

**[நம்மைவிட பலமுள்ள எதிரியுடன் சண்டை செய்ய நேர்ந்தால் அவனை விட பலமானவர்களிடம் காட்டிக் கொடுப்பது நன்மையாகும்.]**

## 96. வேடனின் பதில்

ஒரு வானம்பாடி ஒரு வேடனின் வலையில் அகப்பட்டுக் கொண்டது. அதை வேடன் கொல்லப்போகும் சமயம் அது "நான் என் பசியை ஆற்றிக் கொள்ள சில தானியங்களைத் தின்றது உண்மை. அதற்காக என்னைக் கொல்

வது நியாயமா?" என்று கேட்டது. அதற்கு வேடன்" உன் பசியைத் தீர்த்துக் கொள்ள என் தானியத்தைத் தின்ருய். இப்போது என் பசியைத் தீர்த்துக் கொள்ள உன்னை கொல்வது தான் நியாயம்" என்ருன்.

**[கள்ளத்தனத்திற்கு நியாயமும், வஞ்சகத் திற்கு நேர்மையும் இருப்பதாகச் சிலர் கருது வார்கள்.]**

## 97. உண்ணுமல் புதைத்த தனம்.

ஒரு கஞ்சன் அவன் தேடிய பணத்தை யெல்லாம் பொற் காசுகளாக மாற்றி, அதைத் தன் தோட்டத்தில் பள்ளம் தோண்டிப் புதைத் துவைத்தான். தினமும் அதை வந்து தோண் டிப் பார்த்துக் காப்பாற்றி வந்தான். அவனு டைய பக்கத்து வீட்டுக்காரன் வறுமையால் வாடிக்கொண் டிருந்தவன் தோட்டத்தில் பொன் புதைத்திருப்பதை அறிந்தான். அவன் ஒருநாள் இரவுவந்து பொன்னைத் தோண்டி எடுத்துக்கொண்டு சென்ருன். மறு நாள் காலை வழக்கம்போல கஞ்சன் புதைத்த பொன்னைக் காணவந்தான். அப்போது யாரோ பள்ளத்தை தோண்டி பொன்னை எடுத்துச் சென்றதை அறிந்தான். உடனே

அவன் புலம்பி அழத் தொடங்கினான். அச்சமயம் அவன் நண்பர்களில் ஒருவன் "நண்பா வருத்தப்படாதே. நீ சம்பாதித்த பொருளை அனுபவிக்கவில்லை. அதைப் பொற் காசுகளாகச் செய்து புதைத்து வைத்திருந்தாய். அதனால் உனக்கு ஒரு பலனும் ஏற்படவில்லை. இப்போது நீ அதற்காக அழுவது நல்லதல்ல. பொன்கட்டி புதைத்த இடத்தில் ஒரு கல்லைவைத்துக் குழியை மூடு. அதுவே உன் பொன் கட்டி என்று நினைத்துக்கொள். உனக்கு உன் பொன்கட்டி இருந்ததுபோலவே கல்லும் இருக்கும்" என்றான்.

**[பயன்படாத பொருள் இருப்பதும் இல்லாதிருப்பதும் ஒன்றுதான்.]**

## 98. ஒற்றைக் கண் மான்.

ஒரு மானுக்கு ஒரு கண் மாத்திரமே இருந்தது. அது வேட்டைக்காரர்களிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள ஒரு வழியைக் கண்டுபிடித்தது. அது கடற்கரை ஓரமாகச் சென்று புல் மேயும். பார்வை தெரியும் கண்ணைக் கரைப் பக்கமும், தெரியாததைக் கடல் பக்கமுமாக வைத்துக்கொண்டிருக்கும். இதனால் அது வேட்டைக்காரர்களின் அபாயத்தி

விருந்து தப்ப முடியும் என்று எண்ணிற்று. ஆனால் அது தீங்கு ஏற்படாது என்று எண்ணிய கடல்பக்கம் சில வேட்டைக்காரர்கள் படகில் வந்தார்கள். அவர்கள் மானைக் கண்டதும் அம்பு எய்தார்கள். அம்பினால் அடிபட்ட மான் உயிர் போகும் சமயம் "ஐயோ! நான் எந்தப்பக்கம் ஆபத்து வராது என்று எண்ணினேனோ அந்தப் பக்கத்திலிருந்தே கொல்லப்பட்டேன். ஆபத்து வரும் என்று எண்ணிய பக்கம் ஒன்றும் நடைபெறவில்லை. ஆனால் என்னைப் பாது காத்துக்கொள்ள முயற்சித்தேன் என்ற திருப்தி எனக்கு உண்டு" என்று சொல்லிக்கொண்டது.

**[எச்சரிக்கையும் முன்யோசனையும் இருந்தாலும் சிலசமயம் ஏற்படும் ஆபத்துக்களைத் தடுக்க முடியாமல் போகலாம்.]**

## 99. சிங்கத்திடம் சிக்கிய மான்.

ஒரு மான் வேட்டை நாய்களால் துரத்தி விரட்டப்பட்டது. அது நாய்களிடமிருந்து தப்ப ஓர் சிங்கத்தின் குகைக்குள் புகுந்தது. நேராக அது சிங்கத்தின் வாயருகிலேயே வந்து சேர்ந்தது. சிங்கத்தின் வாயில் அகப்பட்டு உயிர்போகும் தருணத்தில் மான் "ஐயோ என்னைப்போல் முட்டாள் இருப்பானோ? சிறிய எதி

ரிக்குப் பயந்து தப்பித்துக்கொள்ள எண்ணி கொடிய விரோதியின் கையில் அகப்பட்டுக் கொண்டேனே!" என்று நினைத்தது.

**[ஒரு ஆபத்திலிருந்து தப்ப அதைவிடப் பயங்கரமான ஆபத்தில் அகப்பட்டுக்கொள்பவர் களும் உண்டு.]**

## 100. நன்றி மறந்தவன் கதி.

ஒரு வெள்ளாடு வேட்டைக்காரர்களிட மிருந்து தப்ப ஒரு திராட்சைத் தோட்டத்தில் வந்து புகுந்துகொண்டது. சிறிது நேரம்வரை அங்கு யாரும் வரவில்லை. அதனால் அபாயம் நீங்கிவிட்டது என்று வெள்ளாடு நினைத்தது. அது துணிவுடன் தனக்குத் தப்பித்துக்கொள்ள இடம் கொடுத்த திராட்சைக் கொடிகளையே தின்னத் தொடங்கிற்று. அப்போது அங்கு வந்த வேட்டைக்காரன் அதைக் கொன்று போட்டான். அது உயிர்போகும் சமயம் "நான் தப்பித்துக்கொள்ள இடம்கொடுத்த திராட்சைக் கொடிக்கே தீங்கு செய்தேன். அதனால் எனக்கு இந்தத் தண்டனை நியாயமானது தான்" என்றது.

**[உதவிபுரிந்தவர்களுக்குத் தீமை செய்பவர் கள் அதற்காகத் தண்டனையை அனுபவித்தே தீரவேண்டும்.]**

# 101. முட்டாள் கழுதை

ஒரு சேவலும் ஒரு கழுதையும் சேர்ந்து ஒன்ருகக் கூவிச் சத்தமிட்டன. ஒரு சிங்கம் அந்தப் பக்கமாக வந்தது. அச் சத்தத்தைக்



கேட்டு பயந்து ஓடத் தொடங்கிற்று. அதைக் கழுதை பார்த்துவிட்டது. அது தன்னைக் கண்டுதான் சிங்கம் பயந்து ஓடுவதாக நினைத்து விட்டது. உடனே அது சிங்கத்தைத் துரத்திக் கொண்டு ஓடிற்று. சிறிது தூரம் சென்றதும் சிங்கம் திரும்பி நின்றது. கழுதை அதை நோக்கி ஓடி வருவதைக் கண்டது. உடனே அது கழுதையின்மீது பாய்ந்து சின்னபின்னமாய்க் கிழித்துத் தின்றுவிட்டது.

**[சில சமயங்களில் வலியவர்களை எளியவர்கள் வெல்ல முடியும். ஆனால் எளியவர்கள் எச்சரிக்கையாக இல்லாவிட்டால் ஆபத்துதான் ஏற்படும்.]**

## 102. தோட்டக்காரனும் நாயும்

ஒரு தோட்டக்காரனிடம் ஒரு நாய் இருந்தது. அது ஒரு நாள் தோட்டத்துக் கிணற்றில் விழுந்துவிட்டது. தோட்டக்காரன் அதைக் காப்பாற்றக் கிணற்றில் இறங்கினான். அதைத் தூக்கக் கையை நீட்டினான். நாயோ அவன் கையை நீட்டியதைத் தவறாக எண்ணிவிட்டது. தன்னை அவன் தண்ணீரில் அமுத்த வருவதாகத் தீர்மானித்தது. அதனால் அவன் கையைப் பலமாகக் கடித்துவிட்டது. உடனே தோட்டக்காரன் அதைக் காப்பாற்றும் எண்ணத்தை விட்டான். "செய்யும் உதவியை பயன்படுத்திக் கொள்ளத் தெரியாத உன்னை காப்பாற்ற முயன்றது தவறுதான். அதற்கான தண்டனை எனக்குக் கிடைத்துவிட்டது" என்று சொல்லிக் கொண்டே மேலே ஏறி வந்துவிட்டான்.

[**நல்ல எண்ணத்தை உணராதவர்களுக்கு உதவி செய்வது வீண்.**]

## 103. குடியானவன் வளர்த்த ஓநாய்க்குட்டி

ஒரு குடியானவன் ஆதரவற்ற நிலையில் ஒரு ஓநாய்க் குட்டியைக் கண்டான். அதை எடுத்து

வந்து தன் நாய்களோடு வளர்த்தான். ஓநாய்களை வேட்டையாடச் செல்லும்போது நாய்களுடன் அதையும் அழைத்துக்கொண்டு போவான். சில சமயங்களில் ஓநாய்களை நாய்கள் பிடிக்க முடியாமல் போய்விடும். அச்சமயங்களில் ஓநாய்க்குட்டி தன் இனத்தாரோடு சென்று கிடைத்த இரையைப் பங்கிட்டுத் தின்றுவிட்டுத் திரும்பி வரும். ஓநாய்களோடு இரை தின்ன முடியாமல்போன நேரங்களில் அது மந்தையிலிருந்து பிரிந்துவந்த ஆடுகளைக் கொன்று தின்னத் தொடங்கிற்று. குடியானவனுக்கு இது தெரியும் வரை அது ஆடுகளைத் தின்று வந்தது. ஆனால் குடியானவனுக்குத் தெரிந்ததும் அவன் விசாரணை ஏதும் செய்யாமல் ஓநாய்க்குட்டியைத் தூக்கில் போட்டுவிட்டான்.

**[சேர்க்கையாலும் பழக்கத்தாலும் திருத்த முடியாத குணம் உண்மையில் வெறுக்கத் தக்கதே.]**

## 104. ஓநாய், சிங்கம், நரி.

விலங்குகளின் அரசனான சிங்கத்திற்கு வயது அதிகமாயிற்று. நோயினால் அது வருந்திக் கொண்டிருந்தது. அதனால் மற்ற விலங்கு

கள் அரசனைக் கண்டு உடல்நிலையைப் பற்றி விசாரித்துச் சென்றன. ஆனால் நரி மாத்திரம் வரவில்லை. இதைக் காரணமாக வைத்துக் கொண்டு நரியை ஒழிக்க ஓநாய் முயன்றது. அது அரசனிடம் “எங்கள் மன்னனே! நீங்கள் உடல்நலம் இல்லாமல் இருப்பது எல்லோருக்கும் தெரியும். எல்லா விலங்குகளும் வந்து உங்களைப் பார்த்துச் சென்றன. ஆனால் நரியோ உங்களைக் காணவும் வரவில்லை. இது அதற்குள்ள கர்வத்தையே காட்டுகிறது” என்றது.

இதைக் கேட்ட சிங்கம் அதிக கோபமடைந்தது. நரியைத் தண்டிக்க வேண்டும் என்று தீர்மானித்தது. சிங்கம் கோபமடைந்திருப்பதை நரி அறிந்தது. அது நேராக அரண்மனைக்குச் சென்றது. அரசனைக் கண்டு பணிவுடன் “மன்னரே! நான் தங்களைக் காண வராததற்குக் காரணம் இதுதான். தங்களுடைய நோயைப் போக்க ஒரு மருந்தைக் கண்டுபிடிக்க முயன்று வந்தேன். கடைசியாக அதைக் கண்டு பிடித்துவிட்டேன்” என்றது.

சிங்க ராஜா மகிழ்ச்சியடைந்து “அது என்ன மருந்து?” என்று கேட்டது.

“ஒரு ஓநாயின் தோலை அது உயிரோடு இருக்கும்போது உரிக்க வேண்டும். அந்தத்

தோலை ஆவியில் வைத்து எடுத்து ஒத்தடம் கொடுக்க வேண்டும். அவ்விதம் செய்தால் உங்கள் நோய் பறந்து போய்விடும்" என்று நரி கூறிற்று.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த ஓநாய் அங்கிருந்து ஓடித் தப்பித்துக்கொள்ள முயன்றது. ஆனால் நரியும் அரண்மனை சேவகர்களும் அதைப் பிடித்துவிட்டார்கள். ஓநாயின் தோலை உரிக்கும்போது, நரி அதைப் பார்த்து "கெட்ட எண்ணம் உள்ள நண்பனே! ஒருவர் இல்லாதபோது அவரைப் பற்றிப் புறங்கூறி அரசனுக்குக் கோபம் உண்டாகும்படி செய்தாயல்லவா? உன்னைப் போன்ற குணமுள்ளவர்கள் எச்சரிக்கையாக இருக்கவே உனக்கு இந்தத் தண்டனை அளிக்கப்பட்டது" என்றது.

**[புறம் பேசும் இழிவான குணமுள்ளவர்கள் அகப்பட்டு, தண்டனை அடையும்போது மற்றவர்களுக்கு மகிழ்ச்சியையே அளிக்கும்.]**

## 105. பறவைகளின் அரசன்.

பறவைகள் ஒன்று கூடி தங்களுக்குள் ஒன்றை அரசனாக நியமிக்க ஆலோசித்தன. கடைசியில் அழகான தோகையை உடைய மயிலை அரசனாகச் செய்யத்தீர்மானித்தன. அப்

போது பச்சைக் கிளியானது "சகோதரர்களே! உங்கள் முடிவு தவறானது. கழுகு, இராஜாளி, போன்றவை நம்முடன் சண்டை செய்யவந்தால் இந்த அழகான தோகையுள்ள மயிலால் என்ன செய்ய முடியும்? நீங்கள் எதையும் நன்றாக யோசித்து ஒரு முடிவிற்கு வாருங்கள்" என்றது. அதைக்கேட்ட பறவைகள் மீண்டும் யோசித்து கருடனை அரசனாகச் செய்தன.

**(அழகைக் கண்டு மயங்காமல் பயனுள்ளதை அறிய வேண்டும்.)**

## 106. வழியில் கண்ட பணப்பை.

இரண்டு வழிப்போக்கர்கள் ஒன்றாகச் சேர்ந்து ஊர்ப்பயணமானார்கள். வழியில் ஒருவன் ஒரு பணப்பையைக் கண்டு எடுத்தான். அவன் தன்னுடன் வருபவனிடம் "நான் ஒரு

பணபபையைக கணடு எடுத்தேன்" என்றான். அதற்கு மற்றவன் "அப்படிச் சொல்லாதே! நாம் கண்டு எடுத்தோம் என்று சொல். இருவரும் ஒன்றாகச் சேர்ந்து செல்வதால் கிடைப்பதில் இருவருக்கும் பங்கு உண்டு" என்றான்.

"நண்பா! நீ சொல்வது தவறு. நான் அதைக் கண்டு எடுத்தேன். அது என் ஒருவனுக்குத்தான் சொந்தம்" என்றான்.

அச்சமயம் கீழே கிடந்த பணப்பையைத் திருடியவர்களைத் தேடிக்கொண்டு சேவகர்கள் குதிரைகள் மீது வந்தார்கள். இதை அறிந்த பணப்பையைக் கண்டு எடுத்தவன் "நண்பா நம் இருவருக்கும் ஆபத்துநெருங்குகிறது. திருடர்கள் திருடிப் போட்டுச் சென்ற பணப்பை நம்மிடம் இருக்கிறது. சேவகர்கள் பிடித்தால் நம் இருவருக்கும் ஆபத்து நேரிடும் என்றான்.

உடனே மற்றவன் "நமக்கு ஆபத்து நேரிடும் என்று சொல்லாதே. பணப்பையைக் கண்டு எடுத்தபோது எனக்கு அதில் பங்கு இல்லை. இப்போது உனக்கு கிடைக்கப்போகும் தண்டனையில் மட்டும் எனக்கு எப்படி பங்கு கிடைக்க முடியும்?" என்றான்.

**(மகிழ்ச்சியில் இல்லாமல் துன்பத்தில் பங்கு கொடுக்க விரும்பும் விசித்திர பிராணிகளும் [illegible].)**

# 107. இரண்டில் ஒன்று.

ஒரு செம்படவன் மீன் பிடிக்க குளத்திற்குச் சென்றான். குளத்தில் பலர் குடிக்கத் தண்ணீர் மொண்டு கொண்டிருந்தார்கள். செம்படவன் அவர்களுக்கு அருகில் கரையோரமாக வலையை வீசினான். ஒன்றுமே கிடைக்க வில்லை. பிறகு மீன்களை அதிகமாகப் பிடிக்க அவன் தண்ணீரில் இறங்கினான். நாலா பக்கங்களிலும் நீந்தி தண்ணீரை அடித்து மீன்களை வலையினுள் அகப்படும்படி செய்யத் தொடங்கினான். இதைக் கண்ட தண்ணீர் மொண்டு போக வந்தவர்கள் "தண்ணீரை இவ்விதம் கலக்கினால் எங்களுக்குக் குடிக்கத் தண்ணீரில்லாமல் போய் விடும்" என்றனர். அதற்கு செம்படவன் "ஐயா மார்களே உங்களுக்குத் தண்ணீர் குடிக்க வேண்டுமானால் நான் பட்டினியுடன் மடிய வேண்டும். எனக்கு சாப்பாட்டிற்குத் தேவையானதைச் சம்பாதிக்க விரும்பினால் உங்களுடைய குடி தண்ணீரைக் கெடுக்கவேண்டும்! நான் என்ன செய்வது! என்றான்.

**(நம் நன்மைக்காக பிறருக்குத் தீங்கு செய்வது தீமையினும் தீமையாகும்.)**

## 108. சிலையின் விலை

உலகத்தில் தனக்கு என்ன மதிப்பு இருக்கிறது என்பதை அறிய ஒரு தேவதை விரும்பியது. அதற்காக அது சிற்பியின் தொழிற்சாலைக்குச் சென்றது. அங்கு பல தேவதைகளின் சிலைகள் செய்து விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்தது. அது ஒவ்வொரு தேவதைகளின் விலையைக் கேட்டது. பிறகு ஒரு பக்கத்தில் வைக்கப் பட்டிருந்த தன் சிலையைப்பார்த்தது.அந்தச் சிலைஅதை அப்படியே உருக்கி வார்ப்படம் செய்தது போல் இருந்தது. அந்த தேவதை சிலைக்கு மற்ற சிலைகளைவிட அதிகமாக விலை இருக்கலாம் என்று எண்ணிற்று. அது சிற்பக்கலையின் அதிபனிடம் தன் சிலையின் விலையைக் கேட்டது. அதற்கு அவன் "நீங்கள் முதலில் கேட்ட சிலைகளை வாங்கினால் இந்தச் சிலையை உங்களுக்கு இனாமாகத் தருகிறேன்" என்றான்.

**(ஒருவன் தன்னைப்பற்றி அளவுக்கு மீறி மதிப்பது அவனுடைய கர்வத்தையே காட்டும்.)**

## 109. வீட்டு நாயும், வேட்டை நாயும்.

ஒருவன் வேட்டைக்கு என்று பல நாய்களையும், வீட்டைக் காக்க ஒரு நாயையும் வைத்

திருந்தான். வேட்டையில் கிடைக்கும் பொருள் வேட்டை நாய்களைவிட வீட்டு நாய்க்கே அதிக மாகப் பங்கு கிடைத்து வந்தது. இதைக் கண்ட வேட்டை நாய்கள் வருத்தமடைந்தன. அவை நாங்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்து வருகிறோம். நீயோ வீட்டில் இருந்தபடியே எல்லா சுகங்களை யும் அனுபவிக்கிறாய்'' என்றன.

அதற்கு வீட்டு நாய் "நண்பர்களே, நீங்கள் ஒன்றை கவனிக்க வேண்டும். நீங்களோ உங்கள் திருப்திக்காகவும், எசமானனுடைய மகிழ்ச்சிக் காகவும் வேட்டைக்குச் செல்கிறீர்கள். நானோ உங்கள் எல்லோருடைய நண்மைக்காக வீட்டை பாதுகாத்து வருகிறேன். அதனால் எனக்கும் உங்களுக்கும் உள்ள வேற்றுமை நன்றாகத் தெரியவரும்'' என்றது.

**(உலகத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையைச் செய்தாலும் அனைவரும் சமமான பயனை அடைபவர்களாக இருக்கிறோம்.)**

## 110 ஆட்டுக்குட்டியும், ஓநாயும்.

ஒரு ஆட்டுக்குட்டி மந்தையிலிருந்து பிரிந்து வழி தப்பி வந்துவிட்டது. அதை ஒரு ஓநாய் பார்த்து விட்டது. அது ஆட்டுக்குட்டியை பிடிக்க வேகமாக வந்தது. ஆட்டுக்குட்டி திரும்பி

பார்த்து தனக்கு வரப்போகும் ஆபத்தை உணர்ந்தது. அது ஓநாயிடம் "ஐயா நான் உங்களுக்கு இரையாகப் போவது திண்ணம். அப்படியேதான் விதியும் இருக்கிறது. ஆனால் நான் உங்களிடம் ஒன்றை வேண்டிக் கொள்கிறேன். நீங்கள் ஒருப்பாட்டுப் பாடுங்கள். நான் அதைக் கேட்டு மகிழ்ச்சியுடன் உயிரை விடுகிறேன் என்றது.

ஓநாய் மகிழ்ச்சியும், கர்வமும் அடைந்து தன்னால் முடிந்த அளவு உரத்த குரலால் கத்தத் தொடங்கிற்று. அதனுடைய குரல் வெகு விரைவிலேயே வேட்டை நாய்களுக்குக் கேட்டு, அவை வந்து ஓநாயை சூழ்ந்து கொள்ளும்படி செய்து விட்டது. ஆட்டுக்குட்டியும் சமயம் பார்த்து தப்பிச் சென்றது.

வேட்டை நாய்களிடம் அகப்பட்டு உயிர் போகும் சமயம் ஓநாய் வருத்தத்துடன் "எனக்குத் தெரியாத ஒன்றைச் செய்ய முயற்சித்தது பெரிய தவறு. கசாப்புத் தொழிலை கற்ற நான் சங்கீதத்தை பயிலவில்லை. அதனால் நானே என் மரணத்தை வரவழைத்துக் கொண்டேன்" என்று சொல்லிற்று.

**(நம் வேலையை விட்டு தெரியாத ஒன்றைச் செய்ய முற்படுவது ஆபத்தானது.)**

## 111. காகத்தின் நம்பிக்கை

ஒரு மூடநம்பிக்கை உள்ள காக்கை, ஒரு தேவதையை பூசித்து பலிகளும் கொடுத்து வந்தது. இதை ஒரு நாய் அறிந்தது. அது காக்கையினிடம் "ஏ காகமே! நீ வணங்கும் தேவதை உன்னை வெறுக்கிறது. சகுனத்திற்கும் நீ நல்லதல்ல என்று உன்னை விலக்கி வைத்திருக்கிறது. அதனால் நீ இந்த தேவதையைப் பூசிப்பதால் ஒரு பயனும் ஏற்படாது" என்றது.

அதற்குக் காக்கை "தேவதையின் வெறுப்பைப் போக்கி, அன்பைப் பெறமுடியுமா என்று பார்க்கவே அதிகமாகப் பூசித்து வருகிறேன்" என்றது.

[**கெட்ட எண்ணமுள்ளவர்கள் இயற்கையின் கட்டுதிட்டங்களையே மாற்ற முற்படுவார்கள்.**]

## 112. பாம்புடன் விளையாடிய காக்கை

ஒரு பாம்பு குளிருக்காக வெயிலில் படுத்துக் கொண்டிருந்தது. அதை ஒரு காக்கை விளையாட்டுக்காகக் கால்களில் தூக்கிக்கொண்டு உயரப் பறந்தது. பாம்பு அதன் உடலைச் சுற்றி வளைத்து பலமாகக் கடித்துவிட்டது. பாம்பின் விஷம் தலைக்கு ஏறி உயிர்போகும் சமயம் காக்கை "இத்தகைய முரட்டுப் பிராணியுடன்

விளையாடத் தொடங்கியது என் முட்டாள் தனம்தான். இதற்குக் கிடைத்த தண்டனை சரி யானதே" என்றது.

**[வாழ்க்கைக்குப் பயன்படும்படியாக இயற்கை பல நன்மைகளை செய்திருக்கிறது. அதை உணராவிட்டால் வருத்தப்பட நேரிடும்.]**

## 113. ஓநாயின் தந்திரம்

நாய்களால் கடிக்கப்பட்ட ஒரு ஓநாய் தன் காயங்களை நக்கிக் கொண்டிருந்தது. அச்சமயம் அந்தப் பக்கமாக ஒரு ஆடு வந்தது. அதைக் கண்டதும் ஓநாய் "நண்பா, எனக்கு அதிக தாகமாக இருக்கிறது. தயவு செய்து சிறிது தண்ணீர் கொண்டுவந்து கொடு. பிறகு நான் என் இரையை நானே தேடிக் கொள்கிறேன்" என்றது.

அதற்கு ஆடு "நீயே இரையைத் தேடிக் கொள்வாய் என்பதில் சந்தேகமே இல்லை. தாகத்திற்குத் தண்ணீர் கொண்டுவந்தவனையே நீ இரையாக்கிக் கொள்வாய். ஆகவே என்னால் உனக்கு உதவிசெய்ய முடியாது" என்று போய் விட்டது.

**[நன்றியில்லாத கொடுமையான குணமுள்ள வர்களுக்கு உதவி செய்வது அபாயமாகும்.]**

## 114. நரிகளின் பதில்

கழுகுகள் ஒன்றுகூடி முயல்களோடு போர் செய்தன. அவை முயல்களை பயப்படும்படி செய்ததோடு நரிகளையும் தங்களுடன் சிநேக மாக இருக்கும்படி கேட்டுக்கொண்டன. ஆனால் அறிவிற் சிறந்த நரிகளோ "எங்கள் அண்டை வீட்டுக்காரர்களான முயல்களின் நல்ல குணத் தையும் மேன்மைகளையும் நாங்கள் அறிவோம். அதனால் உங்களோடு நாங்கள் சிநேகம் செய்து கொள்ள முடியாது" என்று மறைக்காமல் கூறிவிட்டன.

**[ஒருவரை நன்றாகத் தெரிந்துகொள்ளாமல் அவருடன் சேரக்கூடாது.]**

## 115.. பேராசைக் காரன்.

ஒரு பேராசைக்காரன் பக்கத்து வீட்டார் களின் பொருள்களையும் தானியங்களையும் கொள்ளையடித்து தன் வீட்டில் கொண்டு போய் சேர்த்து வந்தான். ஒரு தேவதை அவன் திருட்டுத்தனத்தைக் கண்டு கோபமடைந்தது. எறும்பாகச் செய்துவிட்டது. ஆனால் எறும்பாக மாறிய அவன் தன்னால் இயன்ற அளவு ஊர்ந்து சென்று திருட்டுத் தொழிலைச் செய்துக்கொண்

டிருந்தான். அவனுக்கு தேவதை அளித்த தண்டனையினுல் திருட்டுக்குணமும் போகவில்லை. அவனும் திருந்தவில்லை.

(இயற்கையான கெட்ட குணங்களை மாற்று வது இயலாத காரியம்.)

## 116. சிங்கம், கழுதை, குள்ளநரி.

சிங்கம், கழுதை, குள்ளநரி ஆக மூன்றும் சேர்ந்து வேட்டைக்குப் புறப்பட்டன. அவை வேட்டையில் கிடைப்பதைச் சமமாகப் பங்கு போட்டுக் கொள்ளத் தீர்மானித்திருந்தன. வேட்டையில் அவற்றிற்கு ஒரு மான் கிடைத்



தது. கழுதையிடம், சிங்கம் அதைப்பங்கு போடும்படி சொல்லிற்று. கழுதையும் நேர் மையாக மூன்று பங்கு போட்டது. அதைக் கண்ட சிங்கம் ஆத்திரமடைந்து கழுதையின்

மீது பாய்ந்து கொன்றுவிட்டது. பிறகு நரி யிடம் மானைப்பங்கு போடும்படி சொல்லிற்று. நரி தந்திரமாக மானின் கால்களையும் தலையும் தனக்கு எடுத்துக்கொண்டு மற்ற பாகங்களை சிங்கத்தின் முன் வைத்தது. நரியின் தந்திரத் தைக் கண்ட சிங்கம் "உண்மையில் நீ நியாயம் தெரிந்தவன். ஒருவன் தகுதிக் கேற்ப அவ னுக்கு மரியாதை செய்ய உனக்கு தெரிந்திருக் கிறது. நீ இதை எப்போது கற்றுக் கொண் டாய்?" என்று கேட்டது. அதற்குக் குள்ள நரி "கழுதைக்கு நேரிட்ட கதியைப் பார்த்துக் கற்றுக்கொண்டேன்" என்றது.

**[மற்றவர்கள் செய்யும் தவறினால் அவர் களுக்கு ஏற்படும் அபாயத்தை அறிந்து எச்சரிக் கையாக இருக்கவேண்டும்]**

## 117. ஆட்டுக்குட்டியும், ஓநாயும்.

ஒரு ஆட்டுக்குட்டி குடிசையினுள் இருந் தது. குடிசையின் கதவு மூடி தாளிடப்பட் டிருந்தது. அது ஜன்னல் பக்கமாகப்பார்த்த போது அவ்வழியே ஒரு ஓநாய் போய்க் கொண் டிருந்தது. வீட்டினுள் இருப்பதால் ஓநாயால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உணர்ந் ததும் ஆட்டுக்குட்டி துணிவுடன் பேசத்

தொடங்கிற்று. ஓநாயையும், அதன் இனத்தையும் கேவலமாகப் பேசிற்று. அதைக் கேட்ட ஓநாய் "நல்லது நண்பா! நீ அந்தக் கோட்டைக்கு வெளியே வந்து இவ்விதம் பேசினால் உனக்குச்சரியான புத்தி கற்பிப்பேன்" என்றது.

**[வலிமையற்றவர்களும் பாதுகாப்பானவிடத்திலிருந்து துணிவுடன் பேசுவார்கள்]**

## 118. கழுதையும், தவளைகளும்.

ஒரு கழுதை பெரிய சுமையுடன் ஒரு ஓடையைக் கடக்க வேண்டியிருந்தது. அது சேற்றில் அகப்பட்டுக் கொண்டதால் பலமாக அழத் தொடங்கிற்று. அப்போது தண்ணீரில் நீந்திக் கொண்டிருந்த தவளைகளில் ஒன்று அதைப் பார்த்து "நண்பா! சேற்றில் அகப்பட்டுக் கொண்டு நீ அழுவதால் என்ன பயன் ஏற்படும்? உன்னாலும் உன் சுமையாலும் என்னுடைய உறவினர்களில் பலர் நசுங்கிப் போகிறார்கள். இதை உணர்ந்து உனது துன்பத்திலிருந்து உன்னையும் எங்களையும் விடுவிக்க அழுகையை நிறுத்தி சேற்றிலிருந்து வெளியேற முயற்சி செய்" என்றது.

**[சில சிறிய துன்பங்களைக் கண்டு வருந்துபவர்கள் அவர்களைவிட துன்பத்தை அனுபவிப்பவர்களைப் பார்த்து, பொருமையுடன் இருக்க வேண்டும்]**

## 119. ஓநாயின் கூக்குரல்.

ஒரு கழுதையின் முதுகில் பெரிய காயம் ஏற்பட்டிருந்தது. அது புல்மேய்ந்து கொண்டிருக்கும் போது காக்கை ஒன்று அதன்மீது உட்கார்ந்து புண்ணைக் குத்தத் தொடங்கிற்று. கழுதை வலி பொறுக்காமல் துள்ளிக் குதித்தது. மனிதன் பார்த்தான். அவனுக்குச் சிரிப்பு வந்தது. அவன் சிரிப்பதை ஒரு ஓநாய் பார்த்து விட்டது. மேலும் அது கழுதையைக் காக்கை குத்தித்தின்பதாக நினைத்தது. உடனே அது மனிதர்கள் செய்யும் அநியாயத்தைப் பாருங்கள். இதுவே காக்கையாக இல்லாமல் ஓநாயாக இருந்தால் மனிதர்கள் அதை அடித்துக் கொன்றிருப்பார்கள். காக்கை கழுதையைத் தின்பதால் அதைப்பார்த்து மனிதன் மகிழ்ச்சி யடைந்து சிரிக்கிறான்" என்றது.

**[தவறான எண்ணம் தவறான வழியிலேயே செல்லத் தூண்டும்]**

## 120 நரியின் துரோகம்.

ஒரு நரியும் ஒரு கழுதையும் சேர்ந்து வெளி ஊருக்குப் பயணமாயின., வழியில் அவை ஒரு காட்டைக் கடக்கவேண்டி யிருந்தது. அப்-

போது ஒரு சிங்கத்தைக் கண்டது நரி. உடனே அது பயந்தது. அது தப்புவதற்காக கழுதைக்குத் தெரியாமல் சிங்கத்தினிடம் போயிற்று. மிகவும் பணிவுடன் "மேன்மை தங்கிய அரசே! உங்களுக்கு ஊழியம் செய்ய நான் காத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் விரும்பினால் என் நண்பனை கழுதையை அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்றது. அதற்குச் சிங்கம் "அழைத்து வா!" என்று சொல்லிற்று.

உடனே நரி வந்து தந்திரமாகக் கழுதையை அழைத்துச் சென்று ஒரு பள்ளத்தில் நிறுத்திற்று. பிறகு சிங்கத்திடம் வந்து கழுதையை நிறுத்தியவிடத்தைச் சொல்லிற்று. அப்போது சிங்கம், நண்பனுக்குத் துரோகம் செய்த நரியை முதலில் கொன்று தின்றது. பின்பு பள்ளத்திலிருந்த கழுதையைத் தின்றது. ஆனால் அது பள்ளத்திலிருந்து மேலே வருவதற்குள் வேடர்கள் அதைப் பிடித்துக் கொன்று விட்டார்கள்.

**[மற்றவர்களுக்குச் செய்யும் தீமை நமக்கே வந்து சேரும்.]**

# 121. காட்டுக் கழுதையும், வீட்டுக் கழுதையும்.

மனிதர்களோடு வசித்து வந்த ஒரு கழுதை நன்றாகத் தின்று கொழுத்திருந்தது. அதன்

உடல் பளபளப்பாகவும் இருந்தது. இதை ஒரு காட்டில் வசிக்கும் கழுதை பார்க்க நேர்ந்தது. அது நாட்டுக் கழுதையினிடம் "சகோதரனே! உன்னைக்கண்டு நான் பொறாமைப்படுகிறேன்" என்று சொல்லிச் சென்றது. சில நாட்களுக்குப் பிறகு நாட்டுக் கழுதையின் மீது பெரிய சுமையை ஏற்றி அதை அடித்துத் துன்புறுத்தி நடத்திச் செல்வதைக் காட்டுக் கழுதை பார்த்தது. உடனே அது "ஐயோ சில நாட்களுக்கு முன் நான் கொழுத்த உடலையும், பளபளப்பான நிறத்தையும் கண்டு பொறாமைப்பட்டேனே! ஆனால் நீயோ அதற்காகப் பொறுமையுடன் எல்லா துன்பங்களையும் அனுபவிக்க வேண்டி இருக்கிறதே" என்றது.

**(தங்கள் நிலையில் திருப்தியில்லாமல் பொறாமைப் படுவது துரதிர்ஷ்டமாகும்.)**

## 122. நாளை என்பது இல்லை.

ஒருவன் பல நாட்களாகத் தீய வழிகளில் சென்று கொண்டிருந்தான். கடைசியில் ஒரு உண்மையான நண்பன் அவனைக் கண்டித்தான். இனி தீய வழிகளில் சென்றால் துன்பப்படுவாய் என்று சொன்னான். அதைக் கேட்டு தீய வழிகளில் செல்பவன் திருந்துவதாக வாக்களித்தான். அவன் அவ்விதம் செய்யவில்லை. திட

ரென்று அவனுக்கு காய்ச்சல் வந்தது. அதனால் அவன் இறந்து விடுவோமோ என்று பயந்தான். அப்போது அவன் "என் காய்ச்சல் விட்டால் நாளையே கெட்ட வேலைகள் செய்வதை விட்டு விடுகிறேன்" என்று தீர்மானித்தான். மறு நாள் காய்ச்சல் விட்டது. அவனோ நாளைக்குக் கெட்ட செய்கைகளை விட்டு விடுகிறேன் என்று சொல்லிக்கொண்டான். இவ்விதமே உடல் நலம் குறைந்தபோது திருந்துவதாகவும், அது குண மான போது நாளைக்கு ஆகட்டும் என்றும் சொல்லிக் கொண்டிருந்தான்.

நண்பனுக்குக் கோபம் வந்தது. அவன் தீய குணம் உள்ளவனிடம் வந்து "நண்பா! நீ சொல்லும் நாளை என்பது ஒரு பொழுதும் வராது. நீயும் அது வரவேண்டும் என்று கோரவும் இல்லை. நீ இப்போதே உன் மனதை மாற்றிக்கொண்டு திருந்த முயற்சி செய். இல்லா விட்டால் நீ சொல்வதை நான் நம்பவேமாட் டேன். நீ கொடுத்த வாக்குறுதிகளைப்பற்றி ஒன்றும் சொல்லமாட்டேன். மேலும் கடந்த காலம் கடந்து போனதுதான். நாளை என்பது நம்முடையது அல்ல. நடக்கும் காலமே நம்மு டையது என்று நினைத்துக்கொள்" என்றான்.

[**நாளை என்று தள்ளிப்போடாமல் ஒன்றைச் செய்ய முயல்வதே அறிவின் பயனாகும்.**]

## 123. நாணலும் கருவேல மரமும்.

நாணலைப்பார்த்துக் கருவேலமரம் ஏளனமாக "நீ மெல்லிய காற்றுக்கும் கூடத் தலை சாய்ந்துவணங்குகிறாய். உன்னைப் போன்ற ஈனகுலத்தவனை நான் பார்த்ததே இல்லை. நானோ



எப்படிப்பட்ட புயல் காற்றுக்கும், மழைக்கும் கூட தலை வணங்கமாட்டேன்" என்றது.

இது நடந்த சிறிது நேரத்திற்கெல்லாம் பெரிய புயல் காற்றும் மழையும் தோன்றிற்று. நாணலோ காற்றிற்கு தலை வணங்கி அது அடங்கியதும் மீண்டும் தலை நிமிர்ந்து நின்றது. கருவேலமரமோ கர்வத்துடன் நின்றிருந்ததால் காற்றினால் வேருடன் பிடுங்கி எறியப்பட்டிருந்

[துன்பம் தெரியாது அதற்கேற்ப நடந்து கொள்வதே நல்லது. மாறாக எதிர்த்து நிற்பது மடமையாகும்.]

## 124. சித்திரமும், புறாவும்.

ஒரு புறாவுக்கு தாகம் அதிகமாக இருந்தது. அது தெள்ளிய நீரோடைபோல் வரைந்த ஒரு

சித்திரத்தைக் கண்டது. உடனே அது யோசியாமல் ஆத்திரத்துடன் தாகத்தை தீர்த்துக் கொள்ள சித்திரத்தை நோக்கி இறங்கிற்று. ஆனால் அது சித்திரத்தின் சட்டத்தில் மோதிக் கீழே விழுந்து இறந்தது.

**[தோற்றத்தைக் கண்டு மயங்கி ஆத்திரப் படுவது அழிவைத்தான் கொடுக்கும்.]**

## 125. புருவும் காகமும்.

ஒரு புரு தனக்கு அதிகக் குஞ்சுகள் ஏற்பட்டதைக் குறித்து பெருமையாகக் காகத்தினிடம் சொல்லிற்று. காக்கை அதைக் கேட்டு வருத்தப் பட்டது. அது "நீ பெருமைப் படுவதைக் கண்டு நான் வருந்துகிறேன். உன்னுடைய குஞ்சுகள் பெரியதாக வளர்வதற்குள் மனிதர்கள் சாப்பாட்டிற்காக குழம்பில் வேகவும், வாணலியில் வறுக்கப்படவும் விதி ஏற்பட்டிருக்கிறது. அதனால் நீ உனக்கு அதிக குஞ்சுகள் ஏற்பட்டதற்காகப் பெருமைப்பட ஒன்றுமில்லை" என்றது.

**[பெற்றோருக்கு மகிழ்ச்சியையும் ஆதரவையும் அளிக்கும் பிள்ளைகளே பிள்ளைகள்.]**

# 126. தேவதையும், ஆடு மேய்ப்பவனும்.

ஆடுகளை மேய்க்கும் ஒருவன் தன்னுடைய காணமல் போன கன்றுக்குட்டியை எங்கும் தேடினன். அகப்படவில்லை. அகப்படாததால் அவன் ஒரு தேவதையிடம் முறையிட்டுக் கொண்டான். என் கன்றுக்குட்டியைத் திருடிச் சென்றவனை எனக்குக் காட்டினல் உனக்கு ஒரு ஆட்டைப் பலி கொடுக்கிறேன் என்று வேண்டினன். உடனே அவனுடைய கன்றுக்குட்டியை திருடிச் சென்ற சிங்கம் அவன் முன் வந்து நின்றது. அதைக் கண்டதும் ஆடு மேய்ப்பவன் மீண்டும் தேவதையிடம் "நான் முன் செய்துகொண்ட பிரார்த்தனையை மறக்கவில்லை. ஆனல் திருடனை என் முன் கொண்டு வந்தது போல் இந்தக் கொடிய சிங்கத்தின் பற்களிலிருந்து என்னையும் காப்பாற்றுங்கள். உங்களுக்கு எருதையே பலி கொடுக்கிறேன்" என்று வேண்டிக் கொண்டான்.

**[நம் எண்ணங்கள் அனைத்தும் ஈடேறுவதாக இருந்தால் அதனல் பல நாசங்களே ஏற்படும்.]**

சித்திரத்தைக் கண்டது. உடனே அது யோசியாமல் ஆத்திரத்துடன் தாகத்தை தீர்த்துக் கொள்ள சித்திரத்தை நோக்கி இறங்கிற்று. ஆனால் அது சித்திரத்தின் சட்டத்தில் மோதிக் கீழே விழுந்து இறந்தது.

**[தோற்றத்தைக் கண்டு மயங்கி ஆத்திரப் படுவது அழிவைத்தான் கொடுக்கும்.]**

## 125. புரூவும் காகமும்.

ஒரு புரூ தனக்கு அதிகக் குஞ்சுகள் ஏற்பட்டதைக் குறித்து பெருமையாகக் காகத்தினிடம் சொல்லிற்று. காக்கை அதைக் கேட்டு வருத்தப் பட்டது. அது "நீ பெருமைப் படுவதைக் கண்டு நான் வருந்துகிறேன். உன்னுடைய குஞ்சுகள் பெரியதாக வளர்வதற்குள் மனிதர்கள் சாப்பாட்டிற்காக குழம்பில் வேகவும், வாணலியில் வறுக்கப்படவும் விதி ஏற்பட்டிருக்கிறது. அதனால் நீ உனக்கு அதிக குஞ்சுகள் ஏற்பட்டதற்காகப் பெருமைப்பட ஒன்றுமில்லை" என்றது.

**[பெற்றோருக்கு மகிழ்ச்சியையும் ஆதரவையும் அளிக்கும் பிள்ளைகளே பிள்ளைகள்.]**

# 126. தேவதையும், ஆடு மேய்ப்பவனும்.

ஆடுகளை மேய்க்கும் ஒருவன் தன்னுடைய காணமல் போன கன்றுக்குட்டியை எங்கும் தேடினன். அகப்படவில்லை. அகப்படாததால் அவன் ஒரு தேவதையிடம் முறையிட்டுக் கொண்டான். என் கன்றுக்குட்டியைத் திருடிச் சென்றவனை எனக்குக் காட்டினல் உனக்கு ஒரு ஆட்டைப் பலி கொடுக்கிறேன் என்று வேண்டினன். உடனே அவனுடைய கன்றுக்குட்டியை திருடிச் சென்ற சிங்கம் அவன் முன் வந்து நின்றது. அதைக் கண்டதும் ஆடு மேய்ப்பவன் மீண்டும் தேவதையிடம் "நான் முன் செய்துகொண்ட பிரார்த்தனையை மறக்கவில்லை. ஆனல் திருடனை என் முன் கொண்டு வந்தது போல் இந்தக் கொடிய சிங்கத்தின் பற்களிலிருந்து என்னையும் காப்பாற்றுங்கள். உங்களுக்கு எருதையே பலி கொடுக்கிறேன்" என்று வேண்டிக் கொண்டான்.

**[நம் எண்ணங்கள் அனைத்தும் ஈடேறுவதாக இருந்தால் அதனல் பல நாசங்களே ஏற்படும்.]**

## 127. சிங்கத்தை வென்ற கொசு

ஒரு கொசு ஒரு சிங்கத்தை சண்டைக்கு அழைத்தது. சிங்கமும் அதைக் கேவலமாக எண்ணி சண்டை செய்யச் சம்மதித்தது. கொசு உடனே உயரப்பறந்து சிங்கத்தின் மூக்கிற்கு நேராக இறங்கி அதனுள் புகுந்துகொண்டது. அதனால் சிங்கம் திணறிப் போய் கீழே விழுந்து புரண்டது. கடைசியில் அது தன் தோல்வியை ஒப்புக்கொண்டது. பிறகு கொசு வெற்றியுடன் சிங்கத்தின் மூக்கிலிருந்து வெளியே வந்தது. அதற்கு ஏற்பட்ட சந்தோஷத்தில் நாலாபக்கமும் பாடிக்கொண்டே பறந்தது. பிறகு அது தற்செயலாக ஒரு சிலந்தியின் வலையில் சிக்கிக் கொண்டது. சிலந்தி அதைத்தின்ன நெருங்கும் போது அது, "ஒரு பெரிய சிங்கத்தை வென்ற நான், இந்த இழிவான சிலந்திக்கு இரையாக வேண்டியிருக்கிறதே!" என்று அவமானத்தால் கண்ணீர் வடித்தது.

[எளியவர்களாலும் வலிமை மிகுந்தவர்களை வெல்ல முடியும்.]

## 128 சிங்கம், கழுதை, முயல்.

முன ஒரு காலததில பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் போர் மூண்டது. அச்சமயம்

சிங்க ராஜா தன் குடிகளை ஆயுதம் ஏந்தி குறிப்பிட்ட இடத்தில் வந்து கூடும்படி கட்டளைப் பிறப்பித்தது. படை கூடும் இடத்தில் மற்ற விலங்குகளை விட கழுதைகளும், முயல்களும் ஏராளமாக வந்து நின்றிருந்தன, அவற்றைக் கண்ட சேனாதிபதி புலி அவைகள் எதற்கும் உதவாது என்று துரத்திவிட நினைத்தார். அதை சிங்க ராஜா அறிந்ததும் சேனாதிபதியை அழைத்து "நீங்கள் நினைப்பது தவறு. கழுதைகள் படையின் முன்னால் கொம்பு வாத்தியம் ஊத மிகவும் பயன்படும். முயலகள் தூது செல்ல பெரிய உதவியாக இருக்கும்" என்றது.

**[உலகில் பயனற்றது எதுவுமே இல்லை.]**

## 129. கழுதையின் ஆசை.

ஒரு கழுதை குடியானவனிடம் வேலை செய்துகொண்டிருந்தது. குடியானவனிடம் அதற்கு அதிக வேலையும் கிடையாது. தீனியும் அதிகமாகக் கிடைத்து வந்தது. ஆனால் கழுதைக்கு அது திருப்தியை அளிக்கவில்லை. அது தேவதையிடம் தனக்கு வேறு ஒரு எஜமானனைக் கொடுக்கும்படி வேண்டிற்று. தேவதையும் மனம் இறங்கி அதற்கு ஒரு குயவனை எஜமானனாகத் தந்தது. குயவனிடம் கழுதைகளிமண்ணையும், மண்பாண்

டங்களையும் சுமக்க வேண்டியிருந்தது. தீனியும் அதிகமாகக் கிடைக்கவில்லை. அதனால் அது தேவதையிடம் மீண்டும் தனக்கு வேறு ஒரு எஜமானனைத் தரும்படி கேட்டது. தேவதை கோபமடைந்து அதை ஒரு சக்கிலியனிடம் ஒப்படைத்தது. சக்கிலியனிடம் கழுதை அதிகமாக உழைத்து சிறிதளவே தீனி தின்னவேண்டியதாயிற்று. அதுவும் தவிர அதனுடைய தோலே உரிக்கப்படும் அபாயமும் இருந்தது. அதனால் மீண்டும் தேவதையிடம் வேறு ஒரு எஜமானனைக் கேட்கமுடியாமல் போய்விட்டதால் தன் செய்கைக்கு வருந்துவதைத் தவிர வேறு ஒன்றையும் செய்யமுடியவில்லை.

**[மாறுதலை விரும்புபவர்கள் அதனால் வரும் நன்மை தீமைகளை ஆராய வேண்டும்.]**

## 130. எஜமானியும் வேலைக்காரிகளும்.

ஒரு பணக்காரியிடம் பல வேலைக்காரிகள் இருந்தார்கள். பணக்காரி மிகவும் கோபக்காரி. அவள் வேலைக்காரிகளைக் காலையில் எழுப்பநேரம் தெரிவதற்காக ஒரு சேவலை வளர்த்து வந்தாள். சேவல் கூவியதும் அவள் வேலைக்காரிகளை எழுப்பி விடுவாள். வேலைக்காரிகளுக்கு இது மிகவும் துன்பமாக இருந்தது. அவர்களுக்கு எஜ

மானியின் சோம்பேறித்தனம் தெரியும். சேவல் இல்லாவிட்டால் அவள் காலையில் எழுந்திருக்க மாட்டாள்; தங்களையும் எழுப்பமாட்டாள் என்பதும் தெரியும். அதனால் அவர்கள் வந்து கூடிச் சேவலைக் கொன்று விடத்தீர்மானித்து அவ்விதமே கொன்று போட்டார்கள். ஆனால் அதன் பின்போ பொழுது விடியும் நேரம் தெரியாததால் எஜமானியம்மாள் நள்ளிரவிலேயே வேலைக்காரிகளை எழுப்பத் தொடங்கினாள். வேலைக்காரிகள் முன்னிலும் அதிகமாக துன்பப் பட வேண்டியதாயிற்று.

**[ஒரு தவறு மற்றொரு பெரிய தவறுக்கு ஆளாக்கி விடுகிறது.]**

## 131. அறிவில்லாத பெட்டைக் கோழி.

ஒரு முட்டாள் பெட்டைக் கோழி கொடிய விஷ நாகத்தின் முட்டைகளை அடைகாத்து வந்தது. அதை அறிந்த தூக்கணாங்குருவி கோழியை எச்சரித்தது! "நீகொடிய நாகத்தின் முட்டைகளை அடை காக்கிறாய். கடைசியில் நீ வருத்தப்படுவாய்" என்றது. ஆனால் பெட்டைக் கோழியோ தூக்கணாங் குருவியின் எச்சரிக்கையை அலட்சியம் செய்தது. அது அறிவில்லாமல் முரட்டுத்தனமாக நாகத்தின் முட்டைகளை

அடை காத்து வந்தது. அதனால் முட்டைகளி லிருந்து நாகத்தின் குட்டிகள் வெளிவந்தன. அடைகாத்த பெட்டைக் கோழியையே கடித்து விட்டன.

**(ஆவலுடன் செய்யும் சில உதவிகள் ஆபத் தாகவும் முடியலாம்.)**

## 132. ஆட்டமும் பாட்டும்.

மழை காலத்தில் பசியால் வாடிய தத்துக் கிளி ஒன்று எறும்புகளிடம் சென்று தனக்கு ஏதாவது சிறிது ஆகாரம் கொடுக்கும்படி கேட் டது. அதற்கு எறும்புகள் "நீ கோடை காலத் தில் உழைத்து உணவுப்பொருள்களை சேகரித்து வைத்திருந்தால் மழை காலத்தில் கஷ்டப்பட வேண்டியிருக்காது அல்லவா?" என்று கேட் டன. அதற்கு தத்துக்கிளி "நான் கோடைக் காலத்தில் சோம்பேரியாக இருக்கவில்லை. பாடிக் கொண்டேயிருந்தேன்" என்றது.

"நல்லது நண்பா! நீ கோடை காலத்தில் பாடியபாட்டிற்கு மழை காலத்தில் நடனம் ஆடி னால்ஆண்டு முழுதும் மகிழ்ச்சியோடு இருப்பாய்" என்று ஏளனமாகக் கூறின.

**[சோம்பலே கெட்ட குணங்களுக்கும் துன்பங் களுக்கும் இருப்பிடமாகும்.]**

## 133. எருதும், வெள்ளாடும்.

சிங்கத்தால் துரத்திவரப்பட்ட ஒரு எருது அதனிடமிருந்து தப்பிக்க எண்ணி வெள்ளாட்டுப் பட்டியினுள் ஓடிற்று. அப்போது வெள்ளாடு வழி மறித்துக் கொம்புகளைக் காட்டி நின்றது. அப்போது எருது "அடே துரோகி! துன்பப்பட்டு ஓடி வந்த ஒரு மிருகத்திற்கு நீ காட்டும் ஆதரவு இதுதானா?" என்றது.

அதற்கு வெள்ளாடு "நான் செய்வது எனக்கு நன்ருகத் தெரியும். உன்னை உள்ளே போகவிட்டு, என்மீது சிங்கத்தைப் பாயவிடுவது பெரிய முட்டாள்தனம் அல்லவா?" என்றது.

**[பிறருக்கு உதவி செய்வதால் நமக்கு தீமை ஏற்படுவதாக இருந்தால் அதைச் செய்யாமல் இருப்பதே நல்லது.]**

## 134. தாயும், பிடிவாதக் குழந்தையும்.

ஒரு ஓநாய் இரைதேடி போய்க்கொண்டிருந்தது. அது ஒரு வீட்டின் முன் சென்ற சமயம், தாய் தன் பிடிவாத குணமுள்ள குழந்தையின் அழுகையை நிறுத்தச்செய்ய, ஓநாயைக் காட்டி "அழுகையை நிறுத்து. இல்லாவிட்டால்

உன்னை அதனிடம் வீசி எறிந்து விடுவேன்" என்ருள். அதைக் கேட்டு ஓநாய் அவள் குழந்தையை எறிந்து விடுவாள் என்று எண்ணி அங்கேயே நின்று கொண்டிருந்தது. ஆனால் குழந்தை அழுகையை நிறுத்தியதும் தாயார் குழந்தையிடம் "ஓநாய் வந்தால் அதன் மண்டையை உடைத்து விடலாம்" என்று சமாதானம் சொன்னாள். தாய் சொன்னதைக் கேட்டதும் ஓநாய் பயமும், வருத்தமும் அடைந்து அங்கிருந்து வெகு வேகமாக ஓடிவிட்டது.

**[நல்லவர்களிடம் நல்லவிதமாகவும் கெட்ட விதமாகவும் நடந்து கொள்ளவேண்டும்.]**

## 135. ஆமையும் பருந்தும்

ஒரு ஆமைக்குத் தரையில் நடப்பதில் சலிப்பு ஏற்பட்டது. அதற்கு பருந்தைப் போல் வான மண்டலத்தில் பறக்கவேண்டும் என்று



ஆசை உண்டாயிற்று. அது ஒரு பருந்தினிடம் தனக்குப் பறக்கக் கற்றுக் கொடுக்கும்படி கேட்டது பருந்து எவ்வளவோ புத்திமதி கூறியும்

ஆமை கேட்கவில்லை. அதனால் வேறுவழியின்றி ஆமையைத் தன் கால்களில் தூக்கிக்கொண்டு பருந்து உயரப் பறந்தது. வெகு உயரம் சென்றதும் அது "இனி நீ பறந்து போ" என்று தன் பிடியை விட்டது. ஆமை பறப்பது எப்படி என்று அறியும் முன்பே ஒரு பாறையில் வந்து விழுந்து சுக்கு நூருக உடைந்து சிதறிப் போயிற்று.

**[தகுதிக்கு ஒவ்வாத ஆசைகள் தன்னையே அழித்துவிடும்.]**

## 136. தாய் நண்டும், அதன் மகளும்

தாய் நண்டு தன் மகளைப் பார்த்து "நீ நேராக நடக்கக் கற்றுக்கொள். உடலை வளைத்து வளைத்து நடக்காதே" என்றது. அதற்கு மகளானது "தாயே! நீ நேராக நடந்து காட்டு. நான் அதன்படியே நடக்கிறேன்" என்றது.

**[சொல்வதைவிடச் செய்து காட்டுவதே தகுந்த உதாரணமாகும்.]**

## 137. சூரியனும், காற்றும்.

சூரியனுக்கும காற்றுக்கும் தங்களில் யார் மேன்மையானவர் என்பது பற்றி சர்ச்சை ஏற்பட்டது. அப்போது மைதானத்தில் ஒரு மனி

தன் போய்க்கொண்டிருந்தான். அவனைச் சுட்டிக்காட்டி அவனுடைய சட்டையை யார் கழட்டும்படி செய்கிறார்களோ அவர்களே உயர்ந்தவர்கள் என்று சூரியனும் காற்றும் ஒப்புக்கொண்டன. முதலில் காற்று தன் வேலையைத் தொடங்கிற்று. அது தனக்குத் துணையாக மழையையும் அழைத்துக்கொண்டது. அது எவ்வளவு பலமாக வீசியும், மழையைப் பெய்யச் செய்தும் வழிப் போக்கன் சட்டையைக் கழட்ட முடியவில்லை. அவன் மழையிலும் காறறிலும் நடுங்கிய வண்ணம் நடந்து கொண்டிருந்தான்.

காற்றின் சோதனை முடிந்ததும் சூரியன் ஆரம்பித்தான். அவன் தன் கிரணத்தைப் பூர்ணமாக வழிப்போக்கன்மீது செலுத்தினான். அதனால் அவனுக்கு அதிகமாக வியர்த்துக் கொட்டியது. உடனே வழிப்போக்கன் தன் சட்டையைக் கழட்டினான்.

**[கூக்குரலையும் ஆடம்பரத்தையும் விட அமைதியும் எளிமையுமே நல்ல பயனுள்ளதாக இருக்கும்.]**

## 138. சிங்கத்தின் தோலைப் போர்த்திய கழுதை

ஒரு கழுதைக்கு சிங்கத்தின் தோல் ஒன்று கிடைத்தது. அது அந்தத் தோலைப் போர்த்திக்

கொண்டு காடுகளில் திரியத் தொடங்கிறது. அது சென்ற விடத்திலெல்லாம் விலங்குகள் பயந்து ஓடி மறைந்தன. இதைக்கண்ட கழுதைக்கு சிங்கத்தைப் போல் கர்ஜிக்கவேண்டும் என்று ஆசை ஏற்பட்டது. உடனே அது பலத்த குரலில் கத்தத் தொடங்கிற்று. அதனால் அதைத் தேடிக்கொண்டு வந்த எஜமானன் கையில் அகப்பட்டுக்கொண்டது. அவன் சிங்கத்தின் தோலைக் கழட்டினான். பிறகு அதனுடைய பின்னங்கால்கள் முறிப்படும்படியாக அடித்து விட்டுத் துரத்தி ஓட்டிச்சென்றான்.

[எந்த மாறுவேடமும் இயற்கையான குணத்தை மாற்றிவிட முடியாது.]

## 139 தவளை வைத்தியன்

ஒரு தவளை வைத்தியனாக மாற வேண்டும் என்று எண்ணிற்று. அது சில மருந்துகளைத் தயார் செய்து கொண்டது. பிறகு அது விலங்குகளின்



கூட்டத்தில் சென்று தனக்குள்ள வைத்

தியத் திறமை பற்றி கர்வமாகப் பேசத் தொடங்கிற்று. அப்போது ஒரு கிழ நரி எழுந்து "ஏ! கர்வமுள்ளவனே! உன் பெருமையை நீயே சொல்கிருயே! வரட்டுக் குரலையும், சொரிபிடித்த உடம்பையும் வைத்திருக்கும் நீ மற்றவர்களுக்கு வைத்தியம் செய்கிறேன் என்று எப்படிக் கூற முடியும்? நீ சிறந்த வைத்தியனுனல் உன்னைக் குணப்படுத்திக் கொண்டு வா! பிறகு உன் வைத்தியத் திறமையைப் பற்றி நாங்கள் யோசிக்கிருேம்" என்றது.

[பெருமை பேசுவதை விட ஒன்றைச் செய்து காட்டுவதே நன்மையாகும்.]

## 140. கர்வம் பிடித்த நாய்

ஒருவன் ஒரு நாயை வளர்த்து வந்தான் எஜமான் அதை நல்லவிதமாக வைத்திருந்ததால் அதற்குக் கர்வம் உண்டாயிற்று. அதனுல் அது எல்லோரையும் கடித்துத் துன்புறுத்தத் தொடங்கிற்று. இதைக் கண்ட எஜமானன் மிகவும் வருத்தமடைந்தான். ஆனுல் அதற்காக அதை வீட்டைவிட்டு விரட்டிவிடவில்லை. எல்லோரும் எச்சரிக்கையாக இருக்க அதன் கழுத்தில் ஒரு மணியைக் கட்டினுன். நாயோ அதை

வேறு விதமாக நினைத்தது. எஜமானனுக்குத் தன்மீதுள்ள ஆசையால் மணியைக் கட்டியிருப்பதாக நினைத்து மேலும் கர்வமடைந்தது. அதன் கர்வத்தை அறிந்த அதன் நண்பர்களில் ஒன்று "இந்த மணி உன்னை அழகு படுத்தக் கட்டியதில்லை. உன்னுடைய கெட்ட குணத்தை அறிவிக்கும் சின்னமாகும். இதற்காக நீ வெட்கப்பட வேண்டுமே தவிர கர்வப்படக் கூடாது" என்றது. அப்போதுதான் நாய்க்குப் புத்தி வந்தது.

[வெட்கப்படவேண்டிய ஒன்றைக் கண்டும் சிலர் பெருமை கொள்வார்கள்.]

## 141. கரடி சொன்னது என்ன?

இரண்டு நண்பர்கள் சேர்ந்து வேறு ஊருக்குப் பயணமானார்கள். வழியில் அவர்கள் ஒரு காட்டைக் கடக்க வேண்டியிருந்தது. இருவரும் காட்டினுள் போகும் சமயம் ஒரு கரடி வருவதைக் கண்டார்கள். உடனே இருவரில் ஒருவன் மற்றவனை விட்டுவிட்டு தான் மாத்திரம் தப்பித்துக் கொள்ள ஒரு மரத்தின் மீது ஏறிக்கொண்டான். மற்றவனுக்குத் தப்ப வேறு ஒரு வழியும் தென்படவில்லை. மேலும் அவனுக்கு மரமேறத்தெரியாது. கரடியோ நெருங்கி

வந்து விட்டது. அவன் ஒன்றும் தோன்றாமல் தரையில் மல்லாந்து படுத்து மூச்சை அடக்கிக் கொண்டான். கரடி அவனை நெருங்கி, முகம் காது ஆகியவற்றை முகர்ந்து பார்த்துவிட்டு அவன் இறந்து விட்டதாகக் கருதி ஒன்றும் செய்யாமல் சென்றுவிட்டது. கரடி சென்றவுடன் மரத்தின் மீதிருந்த நண்பன் கீழே இறங்கி வந்தான். அவன் தன் நண்பனிடம் "உன் காதில் கரடி என்ன சொல்லிற்று?" என்று கேட்டான். அதற்கு மற்றவன் "ஆபத்துக் காலங்களில் கூட நின்று உதவாமல் விலகிச் செல்லும் நண்பர்களோடு ஒருபோதும் சேராதே! என்று கூறிற்று" என்றான். மரத்திலேறியவன் தன் செய்கைக்காக வெட்கமுற்றுத் தலையைக் கவிழ்த்துக் கொண்டான்.



**[ஆபத்துக் காலத்தில் உதவுபவனே உண்மையான நண்பன்.]**

# 142. நன்மையும் தீமையும்

ஒரு வியாபாரிக்கு வியாபாரத்தில் ஏராளமாக லாபம் கிடைத்து வந்தது. அவன் தொட்டது அனைத்தும் பொன்னாக மாறி வந்தது. அதனால் அந்த வியாபாரி மிகவும் கர்வமடைந்தான். தனக்குக் கிடைக்கும் லாபம் அனைத்தும் தன்னுடைய திறமையால் தான் கிடைக்கிறது என்று எல்லோரிடத்திலும் கர்வத்துடன் சொல்லிக் கொண்டிருந்தான்.

திடீரென்று காலம் மாறிற்று. அவனுடைய வியாபாரத்தில் தோல்வி ஏற்பட்டது. அவனது வியாபாரக் கப்பல்கள் புயலிலும், கொள்ளைக்காரர்களிடமும் அகப்பட்டு நாசமடைந்தன. திருடர்கள் வந்து அவன் வீட்டிலுள்ள பொருள்களைத் திருடிக்கொண்டு போனார்கள். வேலைக்காரர்களும் அவனை மோசம் செய்தார்கள். கடைசியில் அவன் சாப்பாட்டிற்கும் வழியில்லாத நிலைக்கு வந்தான். அச்சமயம் அவன் " இதெல்லாம் என் கெட்ட காலத்தால் நடப்பவை. விதிதான் என்னை இந்த நிலைக்குக் கொண்டு வைத்தது " என்று அழுது புலம்பத் தொடங்கினான். அவன் அருகில் இருந்த அதிர்ஷ்டதேவதை" ஏ நன்றி

கெட்ட மானிடனே! நன்மைக்காக வந்தபோது அது உன் திறமையால் ஏற்பட்டது என்று கர்வமாகப் பேசிக்கொண்டிருந்தாய். இப்போது தீமை வந்ததும் அது விதியினால் ஏற்பட்டது என்று விதியின்மீது குற்றம் காட்டுகிறாயே! இதையும் ஏன் உன்னுடைய தவறுகளால் வந்தது எனக் கூறமறுக்கிறாய்?'' என்று கேட்டது.

**[நன்மைகள் ஏற்படும்போது தன்னைப் பாராட்டிக் கொள்வதும், தீமை வரும்போது விதியையும் கடவுளையும் நொந்து கொள்வதும் மனிதனின் இயற்கைக் குணம்.]**

## 143. சோம்பேறியும் தேவதையும்

ஒரு குடியானவன் தனது வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தான். எதிர்பாரவிதமாக



வண்டியின் ஒரு சக்கரம் சகதியில்

கொண்டது. அவன் சக்கரத்தைத் தூக்க முயலாமல் உதவிக்காக தேவதையை கூவி அழைத்தான். அப்போது தேவதை "ஏ சோம்பேறியே! சக்கரத்தை மேலே தூக்க உன் தோளை உபயோகிக்காமல் என்னை உதவிக்காக அழைக்கிறாயே. குழந்தை போல் நீ கூவி அழைத்தால் உனக்கு தேவதை உதவி செய்யும் என்று நினைக்கிறாயா ?" என்று கேட்டது.

**[தன் கையே தனக்கு உதவி என்று முயற்சிக்கவேண்டும். மற்றவரை உதவிக்கு அழைக்கக் கூடாது.]**

## 144. குரங்கும், அதன் குட்டிகளும்

ஒரு குரங்கிற்கு இரண்டு குட்டிகள் இருந்தன. ஆனால் அந்தக் குரங்கு ஒரு குட்டியைத் தான் அதிகமாக நேசித்து வந்தது. அந்தக் குட்டியையே அது மிகவும் பத்திரமாகக் காத்து வந்தது. ஒரு சமயம் வேட்டைக்காரர்கள் வருவதைக் கண்டு அது தன் விருப்பமான குட்டியுடன் தப்ப முயன்றது. அப்போது அது தன் விருப்பமான குட்டியை வயிற்றிலும் மற்றொன்றை முதுகிலும் கட்டிக்கொண்டு மரத்திற்கு மரம் தாவி சென்றது. ஆனால் ஒரு மரக் கிளைக்குத் தாவும்போது அது தவறிக் கீழே விழுந்தது. அதனால் அதன் வயிற்றில் கட்டிக்

கொண்டிருந்த குட்டிக்குப் பலத்த அடிப்பட்டு இறந்து விட்டது. முதுகில் கட்டியிருந்த குட்டியோ ஒரு காயமும் படாமல் தப்பித்துக் கொண்டது.

*[ஓர வஞ்சனை உறவையே அழிக்கும்.]*

# 145. உதவிக்கு வந்தனம்

ஒரு நரி தண்ணீர் குடிக்க ஓடைக்கு வந்தது. அது தண்ணீரில் இறங்கியதும் ஒரு பெரிய ஈக் கூட்டம் ஒன்று அதைச் சூழ்ந்து கொண்டன. அதன் உடலைக் கடித்து ரத்தம் குடிக்கத் தொடங்கின. நரி படும் துன்பத்தை கரையிலிருந்த ஒரு முள்ளம் பன்றி பார்த்தது. அது நரியிடம் "நண்பா! நான் வந்து ஈக்களை விரட்டுகிறேன்" என்றது.

அதற்கு நரி "நீ உதவி செய்வதாகக் கூறிய தற்கு வந்தனம். ஆனால் இப்போது என் ரத்தத் தால் வயிறை நிரப்பிக்கொண்டிருக்கும் இந்த ஈக்களை விரட்டினால் பெரிய ஆபத்தே ஏற்படும். புதிதாக அதிக பசியுள்ள ஈக்கள் வந்து என் உடலில் ஒரு சொட்டு ரத்தம் கூட இல்லாமல் உறுஞ்சி விடும்" என்றது.

*[சிறு துன்பத்தைப் போக்கப் பெரிய ஆபத்தில் சிக்குவதை விட, அதைப் பொறுத்துக் கொள்வதே நன்மையாகும்.]*

## 146. பித்தளையும் மண்ணும்

பலத்த மழை பெய்தது. அதனால் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி பல குடிசைகளை அடித்துச் சென்றது. அப்போது ஒரு பித்தளைக் குடமும், மண் பானையும் அந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டு வந்தன. மண் பானை தூரவிலகிச் செல்வதைக் கண்ட பித்தளைக்குடம் "நண்பா ஏன் விலக்கிச் செல்கிறாய்? நான் உனக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டேன். அருகில்வா. நாம் இருவரும் சேர்ந்து போகலாம்" என்றது.



அதற்கு மண்பானை "நீ மனம் அறிந்து ஒரு தீங்கும் செய்யமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நம்முடைய உடலமைப்பு முற்றிலும் மாறுபட்டது. நான் உன்னைத் தீண்டினாலும், நீ என்னைத் தொட்டாலும் வருத்தப்பட வேண்டியவன் நானேதான். அதனால் நாம் இருவரும் விலகியிருந்தே நமது நட்பை வளர்ப்பதுதான் நல்லது" என்றது.

**[இயற்கையில் மாறுபட்டவர்கள் ஒன்ருகச் சேர்ந்திருப்பது அபாயமாகும்.]**

## 147. சேவலும், நரியும்

ஒரு சேவல் தன் பெட்டைகளோடு மரத்தின்மீது வாசம் செய்து கொண்டிருந்தது. அதை ஒரு நரி பார்த்து விட்டது. சேவலை எப்படியாவது மரத்தைவிட்டு இறங்கச் செய்ய வேண்டும் என்று நரி விரும்பியது. அதற்காக அது சேவலைப் பார்த்து "ஒரு முக்கியமான செய்தியைச் சொல்லவேண்டும். கீழே இறங்கி வருகிருயா?" என்றது.

சேவல் மரத்தின் மீதிருந்தபடியே "என்ன செய்தி?" என்று கேட்டது.

"எல்லா பிராணிகளும் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கின்றன. எந்த ஒரு பிராணியும், மற்ருென்றைத் துன்புறுத்தக்கூடாது. ஒரு தீமையும் செய்யக்கூடாது என்று தீர்மானம் செய்து கொண்டிருக்கின்றன" என்றது நரி.

"இது உலகத்திலேயே மிகவும் நல்ல செய்தி" என்று கூறி சேவல் கழுத்தை நீட்டி எங்கோ எட்டிப்பார்த்தது. அதைக் கண்ட நரி "என்ன பார்க்கிருய்?" என்று கேட்டது.

"ஒன்றுமில்லை. இரண்டு பெரிய வேட்டை நாய்கள் இந்தப்பக்கமாக ஓடி வந்து கொண்டிருக்கின்றன."

"அப்படியானால் நான் இப்பொழுதே இங்கிருந்து போயாக வேண்டும்" என்று அங்கிருந்து ஓடத் தயாராயிற்று.

அப்போது சேவல் "எங்கே போகிறாய்?. எல்லாரும் செய்து கொண் ஒப்பந்தம் உன்னைக் காப்பாற்றாதா ?" என்று கேட்டது.

"காப்பாற்ற வேண்டியதுதான். ஆனால் அந்த வெறிபிடித்த நாய்கள் ஒப்பந்தத்தைப் பற்றிக் கேட்டிராவிட்டால் என்னிடம் இரகம் காட்டாது" என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து ஓடிற்று.

**[பொய் சொல்வதற்கு முன் அதைப்பற்றி நன்றாகச் சிந்திக்கவேண்டும்.]**

## 148. எருதுகளும், சிங்கமும்.

ஒரு காட்டில் நான்கு எருதுகள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாக வாழ்ந்து வந்தன. அதனால் எதிரிகளால் அவற்றை அழிக்க முடியவில்லை. திடீரென்று அவை ஒன்றுடன் ஒன்று

கலையெடுத்து கூஜாவினுள் போட்டுக்கொண்டேவந்தது. அதனல் தண்ணீர் மேல் பாகத்திற்கு வந்ததும் அதைக் குடித்து காகம் தன் தாகத்தை தீர்த்துக் கொண்டது.



**[வலிமையை விட தந்திரமே சிறந்தது.]**

## 151. நிழலும், பேயும்

ஒரு குதிரைக்கு அதன் நிழலைப் பார்க்கும் போதெல்லாம் பயம் ஏற்படும், அது அப்போது துள்ளிக்குதிக்கும். அதேவிதமாக ஒரு சமயம் அது தன் எஜமானனைச் சுமந்துகொண்டு போகும் போது நிழலைக்கண்டு பயந்து துள்ளிற்று. அதைக் கண்ட எஜமான் "ஏ! முட்டாள் குதிரையே! உன் நிழலைக்கண்டு ஏன் பயப்படுகிறுய்? நிழலால் உன்னைத் தொந்தரவு செய்யவோ, உன்னுடைய பிரயாணத்தைத் தடுக்கவோ முடியாது" என்றுன்.

அதற்குக் குதிரை "நீங்கள் சொல்வது உண்மையாக இருக்கலாம். அதனால் நான் பார்க்கக்கூடிய நிழலைக்கண்டு பயப்படுகிறேன். நீங்களோ கண்களுக்குத் தெரியாத பேய்களைக் கேட்டதுமே பயந்து விடுகிறீர்களே!" என்றது.

**[நமக்குப் பழக்கமாக இருப்பதையே பிறர் செய்யும்போது ஏளனமாகப் பேசுவது மனிதர்களின் இயற்கைக் குணம்.]**

## 152. பத்தில் ஒன்பது

ஒருநாய் இரவு வேளையில் அதன் அருகில் வருபவர்களையெல்லாம் பார்த்துக் குரைத்துக் கொண்டிருந்தது. அதைப்பற்றி நாயை அதன் எஜமானன் ஏனென்று கேட்டான். நாய் மிகவும் பணிவோடு " எஜமானே! உங்கள் ஊழியத்தில் உள்ள விருப்பத்தினால்தான் அவ்விதம் குரைக்கிறேன். நீங்கள் என்னிடம் திருடர்களையும் மோசக்காரர்களையும் பார்த்தே குரைக்கும்படி சொன்னீர்கள். ஆனால் இதை நான் திடமாகச் சொல்லமுடியும். சற்று சிந்தித்தால் இரவு வேளைகளில் என் அருகில் வரும் பத்து பேர்களில் ஒன்பது பேர்களைப் பார்த்துக் குரைப்பது நியாயமானது என்று தெரியவரும்" என்றது.

[உண்மையை ஆராய்ந்து அறியாதவரை எதுவுமே புலப்படாது.]

## 153. சிங்கமும், மனிதனும்

ஒரு சிங்கமும் ஒரு மனிதனும் சேர்ந்து வழி நடந்தார்கள். அவர்களிடையே தங்களில் யார் வலிமையும், திறமும் உள்ளவர் என்பது பற்றி விவாதம் ஏற்பட்டது. அச் சமயம் வழியில் ஒரு சிலை வைக்கப்பட்டிருந்தது. அந்தச் சிலை ஒரு மனிதனின் காலடியில் ஒரு சிங்கம் மிதிபடு வது போலச் செதுக்கப்பட்டிருந்தது. அதைக் காட்டி மனிதன், "சிங்கத்தைக் காட்டிலும் மனிதனே எல்லா வகையிலும் மேன்மையானவன்" என்று சொன்னான். அதற்குச் சிங்கம் "உங்களைப்போல் எங்களுக்கு சிற்ப வேலை தெரிந்திருந்தால் ஒரு சிங்கத்தின் ஒரு கையின் கீழ் இருபது மனிதர்களை நீ பார்க்க முடியும்" என்றது.

[நம் சொந்த விவகாரங்களுக்கு நாமே நீதிபதிகளாக மாறுவது தீமையாகும்.]

